# கல்கி



35 காசு

KALKI 18.9.1966

இலங்கையில் 35 சதம்
தபால் செலவு தனி

மபத்லால் க்ரூப்

# 'டெரீன்'/காட்டன்

# சூட்டிங்குகள்

மிடுக்காகத்
தோன்றுங்கள்!
மிடுக்காகவே
இருங்கள்!

காட்டன், 'டெபிலேஸ்டு' மற்றும் 'ம:.பிளேஸ்டு' ரகங்களையும் கோருங்கள்.

நியு ஷொரக் (ஷொரக்) அகமதாபாத் • நியுஷொரக், நடியாத் ஸ்டேன்டர்ட், பம்பாய் • ஸ்டேன்டர்ட், (நியு சைனு) பம்பாய் ஸ்டேன்டர்ட் தேவாஸ் • ஸாஸூன், பம்பாய் • ஸாஸூன் (நியு யூனியன்) பம்பாய் • ஸூரத் காட்டன், ஸூரத் • மபத்லால் பைன், நவ்ஸாரி



**சாமு** எழுதும்

சரித்திரத் தொடர் கதை



# வெண்ணிலவுப் பெண்ணரசி

**கல்கி**

அக்டோபர்
௨ந்தேதி இதழில்
ஆரம்பமாகிறது

# கல்கி

## பொருளடக்கம்

பரபவ, புரட்டாசி 2 ○ செப் 18





### நினைவுத் திரையில்...

சமீபத்திலிருந்து பார்த்தால் ஜடாயு இருந்த மலை அவனது பளுவைத் தாங்க முடியாமல் அழுந்துவது போலத் தோன்றும். பூமியும் அந்த மலையோடு கீழே தாழ்ந்து கொண்டிருப்பதாகவே தோன்றும். உள்ளத்தின் மலைப்பினால் ஏற்படும் தோற்றந்தான் அது.

ஒன்றுயர் நெடுவரை ஒன்றி நின்றது<br>
தாங்கல(ா)ல் இருநிலம் தாழ்ந்து தாழ்வுற<br>
வீங்கிய வலியினில் இருந்த வீரனை,—<br>
ஆங்கவர் அணுகினர், அயிர்க்கும் சிந்தையார்

கவிஞர், ராமன் லக்ஷ்மணன் சீதை மூவரையும் ஏகாந்தமான மனுஷ சஞ்சாரமற்ற மலைப் பிரதேசத்தில் நிற்கச் செய்கிறார். நம்மையுந் தான் நிற்கச் செய்கிறார். ஒரு பயங்கர உணர்ச்சி நமக்கு உண்டாகிறது. அந்த உணர்ச்சியோடு பிரும்மாண்டமான ஒரு கழுகை ஒரு மலைக் கொத்தில் வைத்துக் காட்டுகிறார். ஒரே திகைப்புத்தான்! கம்பர் தரும் காட்சி - டி. கே. சி.

கல்கி, ஜூலை 22, 1945


இத்தனை கனமான
இறக்கைகளோடு நான்
எப்படிப் பறக்க முடியும்?
அந்நியக் கடன்கள்
வரிகள்
பாரத
நாடு


பேஷ்! இந்தப்
படம் கோரக்
காட்சியை
மறைக்கிறது!
நான்காவது
திட்டம்
இந்தியாவின்
பிரத்தியட்ச நிலை
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 7



# பிரஜா உரிமைகளை நிலைநாட்டுவோம்!

ஜனநாயக ஆட்சி முறைக்கு ஆதாரமாக இருப்பது நாட்டு மக்களுக்குள்ள ஜீவாதார உரிமைகள். பாரத நாட்டு சுதந்திரப் பிரஜைகளுக்கு இவ்வுரிமைகளை நிச்சயமாக, ஸ்திரமாக வழங்க வேண்டும் என்பதற்காக அரசியல் சாஸனத்தை உருவாக்கிய அறிஞர்களும், சட்ட நிபுணர்களும் இவற்றை விளக்கி சாஸனத்திலேயே ஒரு தனிப் பிரகரணத்தை இதற்கென இயற்றியிருக்கின்றனர். அரசியல் சட்டத்தின் 19வது பிரகரணம் இதுவே. இதில் பேச்சுரிமை கூட்டம் கூடும் சுதந்திரம், கழகங்கள் சங்கங்கள் முதலியன அமைத்துக்கொள்ளும் சுதந்திரம், நாடு முழுவதிலும் தடையின்றிப் பிரயாணம் செய்யும் உரிமை, நாட்டின் எப்பகுதியிலும் குடியேறித் தொழில்நடத்தி ஜீவனம்செய்யும் உரிமை, சொத்தை ஆர்ஜிதம் செய்து பாதுகாத்து விற்பனை செய்யும் உரிமை, சட்டரீதியான எவ்விதத் தொழிலையும் நடத்தும் உரிமை — இப்படி ஜீவாதார உரிமைகள் நிலைநாட்டப் பட்டிருக்கின்றன. இந்தப் பிரகரணத்தை நமது ஜனநாயக உரிமையின் உயிர்நாடியாக நாம் கொண்டாடி வருகிறோம். ஒரு சுதந்திரப் பிரஜை இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் என்னென்ன உரிமைகளை அநுபவிக்கிறானோ அவற்றையெல்லாம் இந்தப் பிரகரணம் நமக்கு அளித்திருக்கிறது. அன்னியர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்று, சுதந்திரம் அடைந்ததே இந்த ஜீவாதார உரிமைகளை அனுபவிப்பதற்காகத்தான் என்று நாம் பெருமைப் பட்டுக் கொண்டிருக்கிறோம்.

இந்த உரிமைகளுடன் இணைந்த அதே முக்கியத்துவம் வாய்ந்த இன்னொருஜீவாதார உரிமையையும் அரசியல் சாஸனம் நமக்கு அளித்திருக்கிறது. நம்முடைய உரிமைகளை அதிகமாகக் கட்டுப்படுத்தும் சட்டங்களை அரசாங்கம் இயற்றி அமுல்படுத்தினால், அவை அக்கிரமமானவை என்று எடுத்துக் காட்டி நீதிமன்றங்களைக் கொண்டு அவற்றை ரத்து செய்து கொள்ளக் கூடிய வாய்ப்பு அது. இந்த வாய்ப்பையும் நம்முடைய உரிமைகளின் பாதுகாப்பாக நாம் போற்றுகிறோம்.

ஆனால் இவ்வுரிமைகளையெல்லாம் உண்மையிலேயே நாம் இப்போது அநுபவிக்கிறோமா? இக்கேள்விக்கு ''இல்லை, இல்லை'' என்று அழுத்தம் திருத்தமாக விடை சொல்லுகிறார் சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் அரசாங்க வழக்கறிஞர் திரு வி. கே. திருவேங்கடாச்சாரியார். சீன ஆக்கிரமிப்பைக் காரணம் காட்டி நாட்டில் அவசர நிலைப் பிரகடனத்தை ராஷ்டிரபதி என்றைக்குப் பிறப்பித்தாரோ அன்றைக்கே ஜீவாதார உரிமைகள் எல்லாம் ரத்து செய்யப்பட்டு விட்டன. அவசர நிலைப் பிரகடனம் எதுவரையில் அமுலில் இருக்கிறதோ, அதுவரையில் 19வது பிரகரணத்தில் அளிக்கப்பட்டுள்ள எந்த ஜீவாதார உரிமையும் அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்தாது. ஆகவே அவசரகால நிலை உள்ளவரையும் — இப்போதுள்ள அரசாங்கப் போக்கைப் பார்த்தால் இந்நிலை முடிவே இல்லாமல் நீண்டுகொண்டு போகும் என்றே தோன்றுகிறது—ஜீவாதார உரிமைகளை மக்கள் மீண்டும் பெறுவது பற்றி நாம் சிந்திப்பதற்கே இல்லை. சட்டத்தின் ஆட்சி, சட்டத்தின் முன்னிலையில் பிரஜைகள் எல்லோரும் சமம் என்ற உரிமைகள் எல்லாம் ஏட்டில் இருந்தும் நடைமுறையில் இல்லாதவை போன்றே ஆகிவிட்டன. ஜீவாதார உரிமைகள் பறிபோய்விட்டதை நாம் பரிபூரணமாக உணராமல் வாய்ப் பூட்டுப் போட்ட மாடுகளைப்போல் இருந்து வருகிறோம். செல்வாக்குள்ளவர்களுக்கும், பணக்காரர்களுக்கும், அமைச்சர்கள், அதிகாரிகள் போன்றோரின் நட்பு உள்ள பெரிய அந்தஸ்துக்காரர்களுக்கும் ஜீவாதார உரிமைகள் ரத்தாகிவிட்டதால் நஷ்டமில்லை என்று திரு வி.கே.டி. சாரி அழகாகக் கூறினார். அவர்கள் தங்களுக்குத் தேவைப்படுவனவற்றைப் பெற்றுக்கொண்டு சுகமாக வாழுகின்றனர். செல்வாக்குள்ளவர்கள் இஷ்ட

மிருந்தால் நீதிமன்றங்களில் 'ரிட்' மனுக்கள் போட்டு வாதாடிக் காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாம். சாதாரண ஜனங்களால் அவ்விதம் செய்ய முடியுமா?

தனி மனிதர்களின் நிலைமை இவ்விதம் என்றால், தொழில் நடத்தும் கம்பெனிகள், கூட்டு அணிகள், வியாபார நிலையங்கள், பேரச் சாலைகள் ஆகியவற்றின் நிலை இன்னும் பரிதாபகரமானது. இவைகளுக்கு ஜீவாதார உரிமைகள் என்பதே இல்லை. இது விசித்திர நிலை. பலருக்கு இதைப் பற்றித் தெரியவே தெரியாது. தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களில் பெரும்பான்மையினருக்குக்கூட இது தெரியாது. அரசியல் சட்ட அமைப்பிலேயே தொழில் கம்பெனிகளுக்கு ஜீவாதார உரிமை அளிக்கப்படவில்லை. இதை அரசாங்க வர்த்தகக் கார்ப்பரேஷன் விற்பனை வரி அதிகாரி வழக்கில் (AIR 1963 SC 1811) சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு எடுத்துக் காட்டி யிருக்கிறது. 'தொழிற் கம்பெனிகள் பிரஜைகள் அல்ல; ஆகவே, அரசியல் சட்டத்தின் 19வது பிரகரணத்தில் தனிப் பிரஜைகளுக்கு அளிக்கப்பட்டுள்ள ஜீவாதார உரிமைகள் கம்பெனிகள் விஷயத்தில் செல்லுபடி ஆகாது' என்று அந்தத் தீர்ப்புக் கூறியிருக்கிறது.

இதன் விளைவு எவ்வளவு கடுமையானது. இதனால் தொழில் கம்பெனிகளுக்கு ஏற்படும் கஷ்டங்கள் எவ்வளவு என்பதைத் தொழில் கம்பெனிகளே பூரணமாக உணர்ந்து கொண்டிருக்கின்றனவா என்பது சந்தேகம். நாட்டில் ஆயிரக் கணக்கான தொழில் கம்பெனிகள் இயங்கிக் கொண்டிருக்கின்றன. அவைகளில் முதலீடு செய்யப்பட்டுள்ள மூலதனம் ஆயிரமாயிரம் கோடியில் இருக்கின்றன. ஆனால் கட்டுப்பாடும், பகடுபிடியும் கண்ட்ரோல்களும், கோட்டாக்களும் முட்டுக்கட்டைகளும் அவைகளுக்குத்தான் அதிகம். இவ்வளவு நிர்ப்பந்தங்களுக்கு உட்பட்டிருக்கிற தொழில் கம்பெனிகளுக்குத் தனியாக ஜீவாதார உரிமைகள் இல்லையென்றால் அதைவிடப் பரிதாபம் வேறு என்ன இருக்க முடியும்?

இதற்கு விமோசனமாகத் திரு வி. கே. டி. சாரியார் உபாயம் சொல்லி வழிகாட்டுகிறார். அரசியல் சட்டத்தில் இரண்டு புதிய ஷரத்துக்களைச் சேர்க்க வேண்டும் என்கிறார். முதலாவது, இப்போதுள்ள 19வது ஷரத்துக்குப் பின் புதுத் திருத்தமாக ஒரு ஷரத்தை இணைக்க வேண்டும் என்கிறார்: ஒவ்வொரு கார்ப்பரேஷனும், கம்பெனியும், இதர கூட்டு அமைப்புகளும், நாட்டின் பிரஜைகளுக்கு சாஸனம் தருகிற ஜீவாதார உரிமைகள் அனைத்தையும் பெறவேண்டும் என்பது இத் திருத்தம்.

இது வர்த்தக சமூகங்கள் சம்பந்தப்பட்ட விஷயமாதலால் தொழில் துறையினர் அரசாங்கத்துக்கு மனு, மகஜர்கள் அனுப்பி நிலைமையைச் சீராக்கிக் கொள்ள வேண்டும். சட்டசபை அங்கத்தினர்கள் முனைந்தால் அரசியல் சட்டத்தை மாற்ற முயற்சிகள் மேற்கொள்ளுவது கஷ்டமல்ல.

இரண்டாவதாக இப்போதுள்ள 358வது ஷரத்துக்குப் பதிலாகப் புதிய ஷரத்து ஒன்றைப் புகுத்த வேண்டும் என்கிறார். அதாவது, அவசர கால நிலைமை என்ற பிரகடனம் அமுலில் இருக்கும் வரையில், நாட்டின் பாதுகாப்பு சம்பந்தமாகவோ, அவசரகால நிலைமையைச் சமாளிப்பதற்கோ மட்டும் செய்யப்பட்ட எந்தச் சட்டமும் அவசரகால பிரகடனம் ரத்தானவுடன் செல்லுபடியாகாமல் செய்ய வேண்டும் என்பதே இந்தத் திருத்தத்தின் சாரம்.

அவசரகால நிலை ஏற்படலாம். அப்போது தேசப் பாதுகாப்புச் சட்டம் போன்ற ஒரு சட்டம் தேவைப்படும். அதனால் சாதாரண காலங்களில் நிலவும் பிரஜா உரிமைகள் பாதிக்கப்படும். ஆனால் இதைக் காரணமாகக் காட்டிச் சாதாரண அமைதி நிலையில் இயற்றப்படும் சட்டங்களுக்கும் அவசர காலக் கட்டுப்பாடுகளை அளிக்கக் கூடாது என்பதை திரு சாரி கூறும் இத்திருத்தம் வலியுறுத்துகிறது. அவசர காலச் சட்டத்தினால்



பிரஜைகளின் உரிமைகள் அடியோடு மறைந்து போகாமல் அவற்றைப் பாதுகாக்க வகை செய்கிறது இந்த யோசனை.

இவை சட்ட நிபுணர் செய்துள்ள ஷிபாரிசுகள் ஆகையால் சட்ட ஒழுங்குக்கு உட்பட்டு அமைந்திருக்கின்றன. இவற்றைப் பரிசீலனை செய்யுமாறு மேலிடங்களுக்கு திரு வி. கே. திருவேங்கடாச்சாரி அனுப்பியிருப்பதாகவும், அவை பரிசீலனை செய்யப்பட்டு வருவதாகவும் தெரிவித்தார். ஆனால் இப்போதுள்ள ஆட்சியாளர்களின் போக்கை நாட்டு மக்கள் நன்றாகவே அறிந்திருக்கின்றனர். ஆகையால் இம்மாதிரி திருத்தங்களைச் சர்க்கார் உடனே செய்து விடுவார்கள் என்று மக்கள் சும்மா யிருந்தால் காரியம் நடைபெறாது.

எதற்கெல்லாமோ அரசியல் சட்டம் மாற்றப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு திருத்தமும் பிரஜைகளின் ஏதாவது ஓர் உரிமையை ரத்து செய்வதிலும், குறைப்பதிலும்தான் குறியாக இருந்துள்ளது. மேலே கூறியபடி இந்த இரு திருத்தங்களைச் செய்தால் ஆரம்ப கால அரசியல் சட்டம் அளித்த பிரஜா உரிமைகளை மறுபடியும் நிலை நாட்ட முடியும். சாதாரணமாக அரசியல் சட்டத்தைத் திருத்துவதை நாம் ஆதரிப்பதில்லை. ஆனால் இந்த வகையில் மேலும் திருத்தம் செய்வது விரும்பத் தக்கது. இது விஷயத்தில் உண்மை ஜனநாயகத்தில் நாட்டமுள்ள சட்ட உறுப்பினர்களும், நாட்டின் தொழில் ஸ்தாபனங்களும் முனைய வேண்டும்.

# குற்றச்சாட்டுகளின் மூலகாரணம்

பொருளாதாரத்தில் சர்க்காரின் பிரவேசத்தை விஸ்தரிப்பதே ஆள்கிற கட்சியின் அடிப்படைக் கொள்கை. இதன் உபாங்கமாக, தொழிலகங்களின் விவகாரங்களில் ஆட்சியாளரின் பிடிப்பு அதிகமாகியுள்ளது. மேலும் சர்க்காரே பல பிரம்மாண்டமான திட்டங்களை உருவாக்குவதால் பல கண்டிராக்டர்கள், தொழிலதிபர்கள் ஆகியவர்களோடு நெருக்கமான தொடர்புகள் வைத்துக் கொள்ள நேரிடுகிறது. உற்பத்தியிலும், வியாபாரத்திலும் சர்க்கார் அளவுக்கு மீறித் தலையிடுவதால்தான் சர்க்காரின் கொள்கைகளை அமுலாக்கும் பொறுப்பேற்ற மந்திரிகள் தகாத முறையில் சில கம்பெனிகளுக்கோ, தொழிலதிபர்களுக்கோ சலுகை காட்டியதாகக் குற்றச்சாட்டுகளும் பிறக்க ஏது உண்டாகிறது. மந்திரிகள் தவறு செய்தார்களா, செய்யவில்லையா என்பது பிற்பாடு நிரூபணமாக வேண்டிய விஷயம். ஆயினும் அவர்கள் சந்தேகத்துக்கிடமாகி, குற்றச்சாட்டுகளுக்கு இலக்காகி வருவதே நாட்டின் பெருமைக்கு இழுக்குத் தேடித் தருவதாகும். தினந்தோறும் ஏதேனும் ஒரு மந்திரியைப் பற்றிப் பார்லிமெண்டில் குற்றம் சாட்டப்படுவதும், பத்திரிகைகளில் இவை கொட்டை எழுத்துக்களில் பிரசுரமாவதும் நம் தேசத்தின் கௌரவத்துக்கு உகந்ததா?

எனவே குற்றம் சாட்டுவதற்கேற்ற சூழ்நிலையை உற்பத்தி செய்யும் சர்க்காரின் பெர்மிட் - லைசன்ஸ் கொள்கையைத்தான் குறைகூற வேண்டும். இப்போது மந்திரிகள் செய்ததாகச் சொல்லப்படும் குற்றங்களைவிடப் பெரிய குற்றம் அவர்கள் இந்தக் கொள்கையை அரசாட்சியின் உயிர்நாடியாகச் செய்திருப்பதுதான்.

சர்க்காரின் கொள்கைகளினால் மக்களுக்கு ஏற்படும் தீமைகள் ஒருபுறமிருக்க, சர்க்காரின் பெயருக்கே இழுக்கு ஏற்பட அவைதான் காரணம். வினை விதைத்தவன் அதன் விளைவுகளை அறுவடை செய்யத்தான் வேண்டும் என்ற உண்மையை காங்கிரஸார் உணர்ந்து வருகிறார்கள்.

---

■ ■

கரூரில் திருச்சி ஜில்லா சுதந்திரக் கட்சி மகாநாடு கோவை திரு அ. அய்யாமுத்து அவர்களின் தலைமையில் அடக்கமாக நடந்தது. விழாவுக்கு வந்திருந்த திரளான மக்களையும், விழாவில் கலந்து கொண்ட ராஜாஜி, திரு ஜி. கே. சுந்தரம் முதலிய தலைவர்களையும் படங்களில் காணலாம்.

■ ■



# என்ன செய்தி?

**தென் ஆப்பிரிக்காவில்...**

**ஆங்கில விஷயம்**

**குரங்கு மத்தியஸ்தம்**

**லண்டன் டைம்ஸின் பாராட்டு**

தென் ஆப்பிரிக்காவின் பிரதமர் வெர்வொர்ட் படுகொலை செய்யப்பட்டு இறந்த செய்தி உலகத்தையே திடுக்கிட வைத்தது. கறுப்பர்களை ஒதுக்கி வைக்க வேண்டும் என்னும் இன ஒதுக்கல் கொள்கையை மிகக் கடுமையாக அநுஷ்டித்து வந்தவராவார். ஒரு பைத்தியம் பிடித்த வெள்ளையனே அவரைக் கொன்று தீர்த்திருக்கிறான் என்று தெரிய வருகிறது. தென் ஆப்பிரிக்க வெள்ளையர்களின் ஏழைமையை அகற்றுவதற்குப் பதில் வெள்ளையரற்ற மற்ற சமுதாயத்தினருக்கு வெர்வொர்டு எல்லாச் சலுகைகளும் நன்மைகளும் செய்து வந்தார் என்பது அவனது கோபத்துக்கும் குற்றத்துக்கும் காரணமாம்.

அது எப்படியாயினும் அரசியல் தலைவர் ஒருவர் மீது வன்முறைகள் மேற்கொள்ளப் படுவதை நாகரிக உலகம் ஒப்புக் கொள்ளாது.

பத்திரிகை விநியோகங்களைக் கணக்கெடுத்ததில் 1964–65 ஆம் ஆண்டில் மீண்டும் ஆங்கிலப் பத்திரிகைகளின் விநியோகமே அதிகமாக இருக்கிறது என்பது தெரிய வந்திருக்கிறது. 56.27 லட்சம் பிரதிகள் ஆங்கிலப் பத்திரிகைகள் விநியோகம் ஆகின்றன. அடுத்தாற்போல்தான் ஹிந்தி வருகிறது—39.71 லட்சம்.

ஆங்கிலம் தெரிந்தவர்களின் எண்ணிக்கை மொத்த ஜனத் தொகையைப் பார்க்கும் போது 5 சதவிகிதம்கூட இராது என்கிறார்கள். ஆனால் பாரத நாட்டில் விற்பனையாகும் மொத்தப் பத்திரிகைகளில் ஆங்கிலத்துக்குத்தான் மக்கள் முதல் ஸ்தானம் அளித்திருக்கிறார்கள். இதிலிருந்தே பொதுமக்கள் கருத்து ஆங்கிலத்தைப் பற்றி எப்படி இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

முன்னேற்றப் பாதையில் செல்லும் ஆர்வம் உண்மையில் இருக்குமானால், ஆங்கிலத்தின் ஸ்தானத்தை மாற்றக் கூடாது. இதில் மக்கள் விருப்பத்துக்கு மாறாகச் செல்லுகிறது காங்கிரஸ் என்பதற்குப் பத்திரிகைச் செலாவணி ஓர் அழுத்தமான சான்று.

நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் அமுல் நடப்பதைப் பரிசீலிக்க நியமிக்கப்பட்ட கமிட்டி, 400 பக்கங்கள் கொண்டதொரு யாதாஸ்தைச் சமர்ப்பித்துள்ளது. அதில் வழக்கமான பல்லவியையே பாடியிருக்கிறது. எல்லா ராஜ்யங்களும் நிலச்சீர்திருத்தச் சட்டங்களைச் சரியாக அமுல் செய்யவில்லை; இப்படிக் காலந் தாழ்ந்தால் உணவு உற்பத்தி பாதிக்கப்படும் என்று கூறுகிறது.

இன்று உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது என்றால், அதற்கு முக்கிய காரணம், விவசாயத் துறையில் பன்னெடுங் காலமாக ஈடுபட்டு வந்ததால் அநுபவமும், திறமையும், அக்கறையும் கொண்டவர்கள், நிலச் சட்டங்களால் அக்கறை இழந்து இருப்பதேயாகும். இதைப் புரிந்து கொள்ளாமல் பழைய பல்லவியையே பாடுவதில் என்ன பயன்?

இது போதாதென்று சர்க்கார் விவசாயத்தில் இன்னொரு முறையில் பிரவேசிக்க வேண்டும் என்று யோசனை கூறப்பட்டிருக்கிறது. அதாவது பண்ணையாளுக்கும் நிலச்சுவான்தாருக்குமிடையில் சர்க்கார் புகுந்து அவரவர்க்குரிய பங்கை நியாயமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டுமாம்.

முன்பு நிலச்சுவான்தாருக்கு எதிராகக் குத்தகைதாரர்களுக்கு நியாயம் வழங்குவதாகச்சொல்லி நிலச்சுவான்தாரின் அக்கறையைக் குலைத்து உற்பத்தியையும் கெடுத்தாகி விட்டது. இப்போது நிலச்சுவான்தாருக்கு உரியதை வாங்கித் தருவதாகச் சொல்லி அரசாங்கம் பிரவேசிக்கிறது. அப்பத்தைப் பங்கிட்டுக் கொள்ள இரண்டு பூனைகளுக்குக் குரங்கு மத்தியஸ்தம் செய்த கதையாகவே இது முடியும்.

வெளி நாட்டுப் பத்திரிகையில் நம் நாட்டுச் செய்திகளைப் பார்ப்பதில் தனிச் சுவையுண்டு. அதிலும் நம் நாட்டில் மிக முக்கியமான நிகழ்ச்சி என்று கருதுவதை அவை அலட்சியப்படுத்துவதையும் நம் நாட்டில் சாதாரணச் செய்தியாகக் கருதுவதற்கு அவை முக்கியத்துவம் கொடுத்து வெளியிடுவதையும் பார்க்க ஆச்சரியமாக இருக்கும்.

சென்னை பல்கலைக் கழகத்துக்கு ஒன்பதாவது முறையாக திரு ஏ. எல். முதலியார் அவர்கள் துணைவேந்தராக நியமனம் பெற்றிருப்பது நமக்கு முக்கியமான விஷயம்தான். ஆனால் லண்டன் நகரவாசிகளுக்கு அவ்வளவு முக்கியமல்ல என்று நாம் நினைப்போம். எனினும் லண்டன் டைம்ஸ் பத்திரிகை ஆகஸ்ட் 21ந் தேதித் தாளில் பின்வருமாறு வெளியிட்டிருக்கிறது:

"ஸர் ஏ. லக்ஷ்மணஸ்வாமி முதலியார் அவர்கள் ஒன்பதாவது முறையாகச் சென்னை சர்வ கலாசாலையின் துணைவேந்தராக மூன்றாண்டு காலத்துக்கு நியமனம் செய்யப்பட்டிருக்கிறார். இத்துடன் அவர் பதவிக் காலம் 27 ஆண்டுகளாகும். அவர் மக்கட்பேறு மருத்துவத்துறையில் புகழ் பெற்ற டாக்டராவார். இவரது பதவிக் காலத்திலேயே சென்னை சர்வகலாசாலையில் இவருக்கு உருவச் சிலை எழுப்பிக் கௌரவித்திருக்கின்றனர்."

வெளி நாட்டினரின் கவனத்தைக் கவரும் ஒரு பெரியவர் சென்னை சர்வகலாசாலையின் தலைவராக இருப்பது நமது பாக்கியம் அன்றோ!

1. டபிள்யூ. எஸ். இன்ஸுலேட்டர் தொழிற்சாலையின் திறப்புவிழா மத்தியதொழில் மந்திரி திரு சஞ்சீவய்யாவின் தலைமையில் நடைபெற்றது. திரு பி. எஸ். லோகநாத முதலியார் அவர்கள் எல்லாரையும் வரவேற்கிறார்.

2. தமிழக கவர்னர் உஜ்ஜல் சிங் பாராட்டுவிழாவில் முதன் மந்திரி உரையாற்றுகிறார்.

3. ஹோசூர் ஸ்ரீ சந்திர சூடேசுவர சுவாமி கோவிலுக்கு முதன் மந்திரி விஜயம் செய்து, குழாய் வசதியைத் திறந்து வைத்தபோது பூர்ண கும்ப மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். ஸ்ரீ வி. ஆர். நரசிம்மன் திரு பக்தவத்ஸலத்தை வரவேற்று மாலையணிவித்துக் கௌரவித்தார்.





# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி

குழந்தை மீரா வளர்ந்தாள். ஆற்றங்கரைப் பயிர்போல் கிருஷ்ண மந்திரத்தின் சூழலிலே பச்சென்று வளர்ந்தாள். பார்வை வந்தவுடன் அவள் பார்த்தது பாகவதோத்தமர்களின் இடையில் கட்டியிருந்த தம்பூராவைத்தான். ஒலியைக் கேட்கத் தெரிந்தவுடன் அவள் கேட்ட முதல் சப்தம் கண்ணனடியார்களின் ஜாலரா முழக்கத்தைத்தான். தவழ்ந்து சென்று அவள் எட்டிப் பிடித்த முதல் பொருட்கள் கண்ணனின் பூஜா திரவியங்கள்தான். கண்ணனின் பீடத்தைப் பிடித்துக் கொண்டுதான் குழந்தை மீரா எழுந்திருந்து நின்றாள். கையை விட்டுவிட்டு நிற்க முடியாமல் அவள் விழுந்ததும் டாகூரின் மடிமீதே!

வாழ்நாள் முழுதும் இப்படியேதான் அவள் சுருண்டு சுருண்டு அவன் மடிமேல் விழப் போகிறாள். அப்படி மடி மீது விழுவதும் தவறு என்று தவித்து, நிற்கவும் முடியாமல் — விழுவதற்கும் இடம் காணாமல் — அலமந்து போகவும் போகிறாள்.

குழந்தை மீராவுக்குப் பேச வந்தது.

பேச்சே பாட்டாக இருந்தது.

அவளுக்கு அன்னை சொல்லித் தந்த முதல் வார்த்தை 'கான்ஹா'' என்பதுதான்.

நம்முடைய கண்ணனை வடநாட்டில் 'கான்ஹா' என்பார்கள். அந்தப் பெயரைச் சொல்லி ''ஹா'' என்று குழந்தை முடிக்கும் போது அந்த ஒலியில் எல்லையற்ற துயரத்தைக் காண்பான் ரத்தன் ஸிங்.

ஜன்மாஷ்டமித் திருநாள்.

மாதவன் பிறந்த பொன்னாள்!

தூதாளரில் நீராடச் சென்றாள் சந்திரமுகி. மூன்று வயசுப் பாலகி மீராவும் உடன் சென்றாள்.





காழியில் சிவபாத ஹிருதயர் தம் செல்வன் ஞானசம்பந்தனுடன் நீராடச் சென்றபோது அந்தக் குழந்தைக்கும் வயசு மூன்றுதான்.

தடாகக் கரையில் இருந்த வழுவழுப்பான சரளைக் கற்களைக் குழந்தை மீரா எடுத்து வந்து ''அம்மா, இதென்ன?'' என்று கேட்டுக் கொண்டிருந்தது.

முதல் முறையும் இரண்டாம் முறையும் ''கூழாங்கல்'' என்று நிதானமாக விடை சொன்னாள் சந்திரமுகி.

மூன்றும் முறையும் ஒரு கல்லை எடுத்து வந்து ''அம்மா இதென்ன?'' என்று மீரா கேட்டபோது அவள் பொறுமை இழந்தாள்.

''இதுதான் உன் அகமுடையான்'' என்றாள்.

''அகமுடையானை என்ன செய்வது?'' என்று கேட்டது குழந்தை.

''பூஜை செய்வது'' என்றாள் சந்திரமுகி. பதிவிரதையின் வாயில் வேறு என்ன வரும்?

குழந்தை மீரா அந்தக் கல்லைக் கையிலேயே மூடிக்கொண்டு அம்மாவுடன் டாகூர் துவாரத்துக்கு வந்தாள். புஜாரி அர்ச்சனை புரியத் தொடங்கும்போது, மீரா கல்லைக் கிருஷ்ண விக்கிரகத்தின் பாதத்தில் வைத்தாள். இத்தனை நாழிகை மூடியிருந்த வியர்வைக் கையைப் பட்டுப் பாவாடையில் துடைத்துக் கொள்ளப் போனாள்.

''பாவாடையில் துடைக்காதே, இங்கே என் தலையில் அந்தக் கையை வை, தேவி! என் விதி அழிந்து போகும்'' என்று ஆவேசமாகக் கூறினார் அர்ச்சகர். அவருக்கு ஆவேசம் வந்ததற்குக் காரணம் உண்டு.

மீரா தன் கைப்பிடியிலிருந்து தளர்த்திப் பூஜையில் வைத்த ''அகமுடையான்'' சாதாரணக் கல் அல்ல. சியாமளனின் திவ்விய ரூபமாக மதிக்கப்படும் சாளக்கிராமம் அது!

சந்திரமுகிக்குத் தூக்கிவாரிப் போட்டது! தூதாளர் கரையில் சாளக்கிராமம் எப்படிக் கிடைத்தது? அல்லது... வெறும்

கல்தான் இவன் கை பட்டு...? கல்லைப் பெண்ணாக்கிய ராமனுக்கும் மேலாக...?

மேர்தா அரண்மனையில் கண்ணன் பிறந்த நாளை ஆடியும் பாடியும் கொண்டாடினர். அந்த ஆடலுக்கும் பாடலுக்கும் மையமாக விளங்கியது கண்ணனல்ல; மீராதான்.

பீச்சாங்குழல்களில் வண்ண நீர்களை வைத்துப் பரஸ்பரம் அடித்துக் கொண்டதில் பட்டாடைகளெல்லாம் சாயமாகித் தொப்பலாக நனைந்து அன்னை முன் வந்து நின்றாள் மீரா. ஆடைகளைக் களைந்த சந்திரமுகி, "மறுபடியும் உனக்குப் பாவாடை கட்டி விடட்டுமா? அல்லது கண்ணன் வேஷம் போட்டு விடட்டுமா?" என்றாள்.

"ஊஹூம், நான் கண்ணனாக மாட்டேன், மீராவாகத்தான் இருப்பேன். கண்ணன்தான் மீரா வேஷம் போட்டுக் கொள்ள வேண்டும்" என்றது குழந்தை.

"ஏன், அதுவும் போட்டுக் கொள்வான். சக்குபாய் பண்டரிபுரம் போனபோது, கிருஷ்ணன்தான் சக்குபாய் வேஷம் போட்டுக் கொண்டு அவள் வீட்டில் அவளைப் போலவே வேலை செய்து கொண்டிருந்தான்."

"அந்தக் கதையைச் சொல்லு" என்று நச்சரிக்கத் தொடங்கினாள் மீரா.

"கதை சொல்ல இதல்ல சமயம். கோஸ்வாமி ரூப் ஜீ வரப்போகிறார். அவரை வரவேற்கத் தயாராக வேண்டும்" என்றாள் சந்திரமுகி.

ரூப கோஸ்வாமியும் வந்தார்.

குழந்தை மீரா விறுவிறுவென்று அவரருகே ஓடினாள்.

லக்ஷ்மிதேவி பாலையாகப் பிறந்து பிருகு முனிவரின் அருகே சென்றபோது அவர் எப்படி மனம் பூரித்து நின்றாரோ, அப்படியே நின்றார் கோஸ்வாமி ரூபர்.

அவரிடம் சென்றதும் தன் இரு கைகளையும் நீட்டினாள் மீரா.

அவரும் அதைப் புரிந்து கொண்டவர் போலத் தமது தம்புராவைத் தம் பிடியில் வைத்துக் கொண்டே அந்தக் கைகளில் இலேசாகச் சார்த்தினார்.

மீராவின் இளசான விரல்கள் தந்திகளை மீட்டி விட்டன. காற்று தொட்டவுடன் நீர் நிலை அலை எழுப்புவதுபோல், மீராவின் மந்தமாருத ஸ்பரிசம் பட்டவுடன் தம்புராவில் சங்கீத அலை எழுந்தது.

தந்திகளிலிருந்து லலிதை சுத்தமான சுருதியை எழுப்பினாள்.

மீராவின் மழலை மாருத மதுர கண்டத்திலிருந்து

ஹரே ராம், ஹரே ராம்,
ராம ராம, ஹரே ஹரே!
ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண,
கிருஷ்ண கிருஷ்ண, ஹரே ஹரே!

என்ற குளிர்ந்த ஒலி எழும்பிப் பரவியது.

## அத்தியாயம் 3

# கிரிதர கோபாலன்

"என் பதத்தை அடைய விரும்புகிறவர்கள் எனது பெயரை வெட்கம் விட்டுக் கூவ வேண்டும்" என்றான் பகவான். 'வெட்கம் விட்டு' என்பது — 'விஸ்ருஜ்ய லஜ்ஜாம்' என்கிறான் பகவான் — இதில் மிகவும் முக்கியம். இப்படி வெட்கம் விட்டுப் பகவந்நாமத்தைக் கூறுவதைத்தான் "லோக லாஜ் கோயி" என்று மீராபாய் பிற்காலத்தில் தன் பாடல்களில் திரும்பத் திரும்பக் குறிப்பிடப் போகிறாள். "ஹரே ராம், ஹரே ராம், ராம ராம ஹரே ஹரே! ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண, ஹரே ஹரே" என்று சுதாமயமான வார்த்தைகளைக் கூறிய குழந்தை மீரா அன்றே தனது "வெட்கம் விட்ட" வாழ்வைத் தொடங்கி விட்டாள்!

மீராவின் வாழ்வுதான் எத்தனை புதிர்மயமாக இருக்கிறது! பெண்களுக்கு நாணம் முக்கியம். ஆனால் 'நாணத்தை விட்டேன்' என்று பெருமைப்பட்டுக் கொண்டு பாடுகிறாள் மீரா. இதில் அதிசயம், நாணத்தை விட்ட போதிலும் அவளுடைய பெண்மைக்கு இம்மியும் பங்கம் வரவில்லை. இரு வேறு உலகங்கள் என்று தமிழ் முனிவர் கூறியதைத்தான் இங்கு எண்ணத் தோன்றுகிறது. இந்த உலகத்துப் பழக்கவழக்கங்களையும் பண்புகளையும் இந்த உலக காரியங்கள் அனைத்திலும் விடாமல் பின்பற்றத்தான் வேண்டும். ஆனால் வேறு ஓர் உலகத்தில் பிரவேசித்தவர்களுக்கு இவை தேவை இல்லை. தேவை இல்லை என்பதோடு மட்டுமின்றி, விரோதமாகவே கூட இருக்கக்கூடும். நீரில் வாழ்கிற மீனுக்கு நில ஜந்துக்களுக்கு உள்ள நுரை யீரல்கள் இருந்தால் சுவாசிக்க முடியாதல்லவா? அதற்கு வேறு சுவாசகோசம் வேண்டும்.

இருவேறு உலகங்களின் இயல்பை எடுத்த எடுப்பிலேயே இவ்வளவு சுருக்கமாகக் கூறிவிடுவது பொருந்தாது. ஏனெனில், இந்த இரு வேறு உலகங்களின் மோதல்களும் முரண்பாடுகளும் மீராவின் சிந்தனையைக் குழப்பியதுதான் இனி விரிய இருக்கும் கதை.

தோழி லலிதையைத் தொட்டவுடன் ராதாதேவி தன்மயமாகி விடுவாள். குழந்தை மீரா தம்புராவைக் கண்டுவிட்டு, 'ஹரே ராம்' என்று குரல் எடுத்த சமயத்தில் அவளுக்குள் உண்மையான மீரா உதயமானாள்.

இந்தக் குழந்தை ஹரிநாமத்தில் கரைகிறதா, ராகத்தில் கரைகிறதா அல்லது தனது மதுரமான சாரீரத்திலேயே கரைகிறதா என்று வியந்து நின்றனர், ரூபகோஸ்வாமியை வரவேற்கக்கூடிய மேர்தாவின் பிரமுகர்களும் மக்களும்.

ஆனால் கோஸ்வாமியோ ஹரிநாமம் வேறு, அதைப் பொதிந்து கொண்டுள்ள ராகம் வேறு, அதனை இசைக்கும் சாரீரம்



வேறு என்று நினைக்கவில்லை. எல்லையற்ற துயரத்தில் ஒருவர் பேசும் போது அவரது குரலே மாறி விடுகிறது. மாறிய இக் குரல் யாருடையது? துயரம் என்பதற்கே ஒரு குரல் இருக்கிறது. துயரப் படுபவரிடம் அது வந்து சேருகிறது. அப்படியே, பக்தி என்பதற்கே ஒரு ராகம் இருக்கிறது — பக்தி என்பதற்கே ஒரு சாரீரம் இருக்கிறது — அந்த சாரீரம் ராகத்தைத் தேக்கிக் கொண்டு மீராவிடம் வந்திருப்பதை கோஸ்வாமி உணர்ந்தார்.

பாடுகையில் நசைகள் ஏறியிறங்கும் மீராவின் இளம் குருத்துப் போன்ற கழுத்தைக் கண்ட போது அவரது கண்கள் கரகரவென்று நீரைப் பொழியத் தொடங்கிவிட்டன. இளநுங்கு போல் தெள்ளிய அந்தக் கண்டத்துக்குள், நுங்கின் இளநீர்போல் மதுரமான சாரீரம்! இந்த நுங்கை எத்தனையோ மட்டைகள் சுற்றி நெருக்கிக் குமைக்கப் போகின்றன! அத்தனை குமைச்சலுக்கும் நடுவே இனிய நுங்கு வளர்ந்தாக வேண்டும். இல்லை.... இல்லை.... குமைச்சல் இருந்தால்தான் அது இனிய நுங்காக வளர முடியும். குமைச்சலுக்காக விடுகிற கண்ணீர் தான் அதன் இளநீர் — இனிய கீதம்.

பக்தி மார்க்கத்தின் எல்லையாகவும் ஞான மார்க்கத்தின் எல்லையாகவும் கானமார்க்கம் என்று ஒன்று உண்டு. சாதனைகளால் பெறக் கூடிய மார்க்கமல்ல அது. அருள் ஒன்றின் மூலமே அதைப் பெற முடியும். அப்படிப் பட்ட அருட் குழந்தையே மீரா என்று கோஸ்வாமி கண்டார்.

சுற்றுப்புற நினைவு வந்த கோஸ்வாமி தமது கண்களைத் துடைத்துக் கொண்டார்; தமது தீர்க்க தரிசனத்தையும் சட்டென்று துடைத்து விட்டுக் கொண்டார்.

குழந்தை மீராவோடு தாமும் பகவந் நாம பஜனையில் கலந்து கொண்டார். குழுமியிருந்த அனைவரும் கலந்து கொண்டனர். வீரம் செறிந்த மக்களின் நாவிலிருந்து ஈரம் கனிந்த நாமம் புறப்பட்டது.

ஹரே ராம், ஹரே ராம், ராம ராம, ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண
ஹரே ஹரே !

என்ற நாதம் மேர்தாவெங்கும் பரவியது.

காலத்தின் நினைவு அறிந்த அந்த கான உலகிலும் யாரோ ஒருவர் மட்டும் கணக் கெடுத்துக் கொண்டிருந்தார். நூற்றெட்டு முறையானதும் "ஜெய், ராதே ஷியாம்" என்று கோஷித்தார்.

மீராவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தம்புராவை மீட்டிக் கன்றிய சொகுசான விரல்கள் நிலைத்து நின்றன.

சுற்றுமுற்றும் பார்த்தாள் குழந்தை.

எல்லையில்லாத வெட்கமாகி விட்டது அவளுக்கு. அந்த உலகம் போய், இந்த உலகம் வந்து விட்டதல்லவா ?

ஓடிப் போய் அம்மாவின் மடியில் முகத் தைப் புதைத்தபடி குப்புறப் படுத்துக் கொண் டாள். அவளது பின்னந் தலையில் வைத்துப் பின்னியிருந்த அராக்கொடி ஆபரணம் சரிந்து உச்சித் தலைக்கு நகர்ந்தது. அந்த அராக்கொடியில் இரு பாதங்கள் கற்களால் இழைக்கப்பட்டிருந்தன. குருபாதம் தங்க வேண்டிய தலை உச்சிக்கே அது வந்துவிட்டது!

அவளை ஆசிர்வதிக்கும் மந்திராட்சதைகளாகச் சந்திரமுகியின் கண்களிலிருந்து முத்து முத்தாக நீர் உதிர்ந்து கொண்டிருந்தது.

ரத்தன்சிங் கோஸ்வாமியாரிடம் தன் அருமை மகளின் கையில் கிடைத்த சாளக்கிராமத்தைப் பற்றிக் கூறினான். டாகூர் த்வாரத்தின் பஜனைகளுக்கிடையே அவள் வளர்ந்து வருவதைச் சொன்னான்.

"ஸ்வாமிஜி மஹராஜ், இவளுடைய எதிர்காலம் எப்படியிருக்கும்?" என்று வினவினான்.

சந்திரமுகி ஆவல் மீதூர ரூபகோஸ்வாமியையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இவளுடைய எதிர்காலமா?" என்று கேட்டுச் சிரித்தார் கோஸ்வாமி. ஒரு லட்சம் அர்த்தங்கள் கொண்ட சிரிப்பு அது.

"காலம் காலகலாதீதம்.... கோவிந்தம் பரமானந்தம்" என்று பாடினார் கோஸ்வாமி. பாடிக் கொண்டே சிரித்தார். சிரித்துக் கொண்டே பாடினார்.

ரத்தன்சிங் சிந்தித்தான். "கால அதீதம் என்பது கோவிந்தனைப் பற்றிய விஷயம். நான் கேட்டது குழந்தையைப் பற்றி அல்லவா ?" என்றான் விநயத்துடன்.

"குழந்தையைப் பற்றிய விஷயமும் கோவிந்தனைப் பற்றியதுதான். துருவித் துருவிக் கேட்காதே. பகவானின் இரகசியங்களை அம்பலப்படுத்துவதற்கில்லை. உன் பெண்ணின் வாழ்க்கையைப் பற்றி வருங்காலத்தில் எவ்வளவோ பேர் எவ்வளவோ விதமாகப் பேசப் போகிறார்கள். பல தலை முறைகளுக்குப் பிறகும்கூட இவள் வாழ்க்கையை ஆராயப் போகிறார்கள். ஆனால் யாருக்கும் அது பூரணமாகத் தெரியப் போவதில்லை. ஆண்டவன் தன் இரகசியத்தைப் பத்திரமாகக் காத்துக்கொள்வான். அதோ அந்த கிரிதர கோபாலனின் விக்கிரகத்தைப் பார். அவனுடைய விரல் நுனியில் கோவர்த்தன கிரி

வைத்து தூக்கிக் கொண்டிருப்பதால்தான் கிரிதரன் என்று பெயர் எடுத்திருக்கிறான். ஆனால் இந்த விக்கிரகத்தில் என்ன பார்க்கிறாய்? அவன் விரலைத் தூக்கிக்கொண்டிருப்பதை மட்டும்தான் பார்க்கிறாய். அதன் மீது கிரியைப் பார்க்கவில்லை. ஏனென்றால் சிற்பியால் இந்தச் சிறு விரலின் மீது ஒரு கிரியை நிறுத்த முடியாது. அது கோபாலன் ஒருவனால்தான் முடியும். இந்தக் குழந்தையின் எதிர்காலமும் ஒரு மலையாக இருக்கப் போகிறது. அதைக் கண்ணன்தான் தூக்கிப் பிடித்து நிறுத்த முடியும். நம்மால் முடியாது. நமக்கு அப்பாற்பட்ட விஷயம் அது'' என்றார் கோஸ்வாமி.

கிரிதர மூர்த்தியைப் பார்த்தான் ரத்தன் சிங். ரூபர் ஆராதிக்கும் விக்கிரகம் அது. அவரது சீடர்கள் அதனைச் சபா மத்தியில் ஒரு பீடத்தில் எழுந்தருளச் செய்திருந்தார்கள். அந்த கிரிதர கோபாலன் விக்கிரகத்தில் கிரியைக் காண முடியாவிடினும் தூக்கிய விரலைக் காட்டியே, அதன்மீது உள்ள கிரியைக் குறிப்பால் உணர்த்திவிட்டிருந்தான் சிற்பி. மீராவுடைய வாழ்வு இன்னதென்று வெளிப்படக் காட்டாமலே அது கோவிந்தன் கையில் இருக்கிறது என்பதை மட்டும் புரிய வைத்துவிட்டார் கோஸ்வாமி.

உள்ளம் கசிந்து குழந்தையின் புறம் திரும்பினான் ரத்தன் சிங். அவளும் கிரிதர மூர்த்தத்தைப் பற்றி ரூபர் கூறியவுடன் அம்மாவின் மடியில் பதிந்திருந்த தன் முகத்தைத் தூக்கி அந்தத் திசையில் கண்களைச் செலுத்தினாள்.

தம்புராவைக் கண்டவுடன் அவளுடைய ஆன்மப் பயிருக்கு நீர் பாய்ந்தது. கிரிதரன் திருவுருவைக் கண்டவுடன் அந்தப் பயிர் மீது இன்னென சூரிய வெளிச்சமும் படிந்தது.

வைத்த கண் வாங்காமல் கிரிதரனையே பார்த்துக் கொண்டிருந்தாள் குழந்தை. அப்போது அவளது இரு வேறு உலகங்களில் இருவேறு அதிசயங்கள் நிகழ்ந்தன. ஒருலகத்திலுள்ள நிச்சலமான தடாகத்தில் 'சிலுசிலு'வென்று முல்லை மொட்டுக்களைச் சரித்துவிட்டாற்போல் சிறிய சிறிய அலைகள் தோன்றின. சிற்றலைகள் பேரலைகளாக மாறின; வான்முகடுவரை எட்டிவிடும்போல் அவை ஆரவாரம் செய்தன. இன்னோர் உலகிலோ முன்னம் அலையடித்துக் கொண்டிருந்த தடாகம், கலைந்த வஸ்திரத்தை இழுத்துப் போர்த்திக் கொள்வதுபோல் திடீரென அலைகளையெல்லாம் சுருக்கிக் கொண்டு சாந்தமாகத் தூங்கி விட்டது!

தூக்கத்திலிருந்து தட்டி எழுப்பியது ஒரு குரல்.

''யார் கூப்பிடுவது?'' என்றாள் மீரா.

''ஏன், நான்தான். நான் யாரென்று தெரியவில்லையா?'' என்றான் கிரிதரன்.

''நீதானே? தெரியும், தெரியும். முரளீதரனல்லவா நீ? எதற்காக வந்தாய்?'' என்று கேட்டாள் மீரா.

''நான் ஒன்றும் முரளீதரன் இல்லை. என் கையில் முரளியா இருக்கிறது? நன்றாகப் பார். முரளி மெல்லியதாக இருக்கும். ஆனால் என் கைபட்டுவிட்டால் கனமான சங்கீதத்தைத் தரும். இப்போதோ என் கையில் கோவர்த்தனகிரி இருக்கிறது. இது பார்க்கக் கனமாக இருக்கும். என் கைபட்டுவிட்டால் மெல்லியதாகிவிடும். இதோ பார்த்தாயா? ஒரே விரலால் தூக்கி நிறுத்துகிறேன்'' என்றான் கிரிதரன்.

''எதற்காக இதைத் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிறாய்? உனக்கு இவ்வளவு பலம் இருக்கிறது என்று காட்டுவதற்கா?'' என்று கேட்டாள் மீரா.

''பலம் என்றால் என்ன?'' என்று எதிர்க் கேள்வி விடுத்தான் கண்ணன்.

''பலம் என்றால்... பலம் என்றால்'' — பலம் என்றால் என்ன என்று மீராவுக்குப் புரிந்து விட்டது.

''பலம் என்றால் உடம்பு சக்தியாயிருப்பது என்று அர்த்தமில்லை. பலம் என்றால் அன்பு. உனக்கு ரொம்பவும் அன்பு. அந்த அன்புக் குணத்தினால்தான் சிறுபிள்ளையாயிருந்தாலும் மலையைத் தூக்க முடிகிறது!'' என்றாள்.

''குன்று குடையாய் எடுத்தாய், குணம் போற்றி!'' என்று பாடினான் கண்ணன்.

அது அவனாகப் பாடியதல்ல. ஆண்டாளின் வாக்கைத்தான் கூறினான் அவன். மீராவுக்கு ஆயிரமாயிரம் ஆண்டுகளின் நினைவுகளெல்லாம் வந்தன. எதிரே நிற்கும் பாலனுக்காக அந்த நினைவுகளை அழித்துக் கொண்டாள்.

''நீ இந்தக் குன்றை அன்புக்காகத்தானே தூக்கினாய்?'' என்று வினவினாள்.

''ஆமாம். தன்னால்தான் மழை பெய்கிறது என்று இந்திரனுக்குக் கர்வம் ஏற்பட்டது. அவனிடம் எனக்கு ரொம்பவும் அன்பு. அவன் கர்வப்பட்டிருக்கிறானே என்று வருத்தப்பட்டேன். அவனுக்குப் பூஜைசெய்யவேண்டாம் என்று ஆயர்களிடம் சொன்னேன். அவர்கள்தான் நான் சொன்னதையெல்லாம் செய்வார்களா? ''அப்படியே'' என்றார்கள். ''நமக்குப் பயிர் பச்சை தருவதும், கனை நீர் தருவதும், மேகத்தைத் தடுத்து மழை தருவதும் கோவர்த்தனகிரிதானே? அதற்கே பூஜை செய்யுங்கள்'' என்றேன். ஆயர்கள் அப்படியே செய்தார்கள். இந்திரனுக்கு மகா கோபம் வந்து விட்டது. கொட்டு கொட்டு என்று பிரளயமாக மழை பெய்யத் தொடங்கி விட்டான். ஆயர்கள் கதிகலங்கிப்போனார்கள். கண்பார்வைகூடத் தெரியாமல் மழை பெய்ததால் எங்கு செல்வது, எப்படிச் செல்வது என்று தெரியாமல் திண்டாடினார்கள். அவர்களின் துயரம் எவ்வளவுக்கு அதிகமாயிற்றோ அவ்வளவுக்கு எனக்கு அன்பு அதிகமாகி விட்டது. அன்புதான் பலமாச்சே! அப்படியே சுண்டு விரலை அடியில் கொடுத்து கோவர்த்தன மலையை நெம்பி எடுத்தேன். அந்த விரல் மீதே மலையை நிறுத்தி வைத்துக் கொண்டேன். குடையின் கீழ் நிற்பது போல ஆயர்களும், ஆனிரைகளும் குன்றின்கீழ் வந்து சுவஸ்தமாகத் தங்கி விட்டார்கள். கோவர்த்தனம் நம்மைக் காப்பதால் அதற்குப் பூஜை போட வேண்டும் என்று சொன்னேன் அல்லவா? அதற்கேற்ப அந்த கோவர்த்தனமே மழையிலிருந்து அவர்களைக் காக்குமாறு செய்தேன். நான் காத்தேன் என்று சொன்னது இரண்டாம் பட்சம்தான். இந்திரன் பலம் கொண்ட மட்டும் மழை பெய்து பார்த்

தான். ஆனால் அந்த பலம் அன்பின் பலம் இல்லை. அகங்கார பலம் அல்லவா? அது தோற்றுப் போயிற்று. கடைசியில் அகங்காரம் குன்றி என்னிடம் வந்து நல்ல புத்தி பெற்ருன். இப்படியாக எனக்கு அன்பான ஆயர்களை இந்திரனின் கோபத்திலிருந்து காப்பாற்றினேன். எனக்கு அன்பான இந்திரனையும் அவனுடைய கோபத்திலிருந்தே காப்பாற்றினேன். கிரியைத் தூக்கி ஆயரைக் காத்ததால் என்னை 'கிரிதர கோபாலன்' என்று சொல்கிறார்கள். ஆனால் நீயோ, நான் புல்லாங்குழல் கொண்டு வராதபோதே என்னை 'முரளீதரன்' என்கிருயே!'' என்று கதை சொல்லி முடித்தான் கண்ணன்.

கிரிதரன் வரலாறு மீராவுக்கு ரொம்ப ரொம்பப் பிடித்துவிட்டது. எங்கிருந்தோ கருமேகங்கள் திரள்திரளாக உறுமிக்கொண்டு தன் தலைக்கு மேல் சூழ்ந்துகொள்வது போலவும், பிரளயமாக மழை பொழியப் போவது போலவும் அவளுக்குத் தோன்றியது. அந்த மழையிலிருந்தும் கிரிதரன்தான் அன்பு மலையைக் குடை பிடித்துத் தன்னைக் காக்க வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள்; அப்படி அவன் செய்வான் என்று நம்பினாள்.

''கிரிதரா, நீ இப்போது வந்தது என்ன காரணத்துக்காக?'' என்று கேட்டாள் மீரா.

''காரணத்தோடுதான் நான் வரவேண்டுமா?'' என்று எதிர்க் கேள்வி போட்டான் கண்ணன்.

''அதற்காகச் சொல்லவில்லை, கண்ணு! காரணம் இருந்தால்கூட நீ வரமாட்டாயாமே! பக்தர்கள் படாத பாடு பட்டால்கூடத் தரிசனம் தரமாட்டாயாமே! அப்படிப்பட்ட நீ தானாகவே வந்ததால் ஏதோ காரணம் இருக்க வேண்டும் என்று நினைத்தேன்'' என்றாள் மீரா.

''பொல்லாத குட்டியாக இருக்கிறாயே! காரணத்தோடுதான் நான் வந்தேன். அது உனக்கே தெரியும்.''

''ஊஹூம். தெரியாது.''

''பொய் சொல்கிறாயா?''

''நிஜம்தான் சொல்கிறேன்.''

''அதாவது நிஜமாகப் பொய் சொல்கிறாயாக்கும். மீரா, விளையாட இது நேரமில்லை.''

''ஏன், நேரமில்லாமல் என்ன? சதா சர்வ காலமும் உனக்கு விளையாட்டுத்தானே?''

''என்னை மடக்காதே மீரா, என்னைச் சீக்கிரம் இந்தக் கிரிதர வேஷத்திலிருந்து மாற்றி முரளீதரனாக்கு.''

''அப்படியென்றால்?''

''புரியாதது போல் பாசாங்கு பண்ணாதே. நான் இந்தக் கிரியைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தால் எப்படிக் குழலூத முடியும்?''

''நீ கிரியைத் தூக்கிக் கொண்டிருப்பதற்கு நானா காரணம்? அதைக் கீழே வைத்துவிட்டுத் தாராளமாகக் குழல் ஊதேன். நான் வேண்டாமென்கிறேனா, என்ன? பார்க்கப் போனால் எனக்கே உன் வேணு கானத்தைக் கேட்க வேண்டுமென்றுதான் ஆசை ஆசையாக இருக்கிறது.''

''ஆசை இருந்தால் மட்டும் போதுமா? நான் வேணு கானம் தர நீதான் வழி செய்ய வேண்டும்.''

''நான் செய்ய என்ன இருக்கிறது? வேணுவைத்தான் இடுப்பில் சொருகிக் கொண்டிருக்கிறாயே! எடுத்து வாயில் வைத்துக் கொண்டு ஊதேன்!''

''என்ன மீரா, இப்படிப் பேசுகிறாய்? வேணு கானத்துக்கு வேணு மட்டும் இருந்தால் போதுமா? கானம் வேண்டாமா?''

மீரா பதில் பேசவில்லை.

''வெட்டு வெட்டு என்று மறித்த என் அருமை மீரா இப்போது ஏன் பேசவில்லையாம்! 'உன் கானத்தை நானா எடுத்துக் கொண்டு வந்து விட்டேன்?' என்று ஏன் கேட்கவில்லையாம்?'' என்றான் கண்ணன்.

அவன் குரலில் குறும்பு தொனிக்கவில்லை. ஆழ்ந்த துயரமே பிரதிபலித்தது. கானத்தைப் பிரிந்த கலைஞன் மட்டுமே பெறக் கூடிய துயரம் அது.

அவனுடைய கானத்தை அவள் எடுத்துக் கொண்டு வந்து விட்டாள் என்று சொன்னால் மட்டும் போதுமா? அவனுடைய கானமே அவள்தானே?

மீரா அவன் இடையில் சொருகியிருந்த வேய்ங்குழலை உருவி எடுத்துக் கொண்டாள். அவன் கழுத்தில் அணிந்திருந்த துளசிச் சரத்தை எடுத்து அதற்குள் அடைத்தாள்.

''நீ என்று என்னைக் கலியாணம் செய்து கொள்ள மனம் வைக்கிறாயோ, அன்றைக்கு இந்தச் சரத்தைக் குழலிலிருந்து எடுத்து என் கழுத்தில் வரமாலையாக போடு. அன்றைக்கே நானும் இந்தக் காலியான குழலுக்குள் சப்த ஸ்வரங்களாகப் புகுந்துகொள்வேன்'' என்றாள்.

அதற்குக் கோடி அர்த்தமுண்டு.

கண்ணன் புரிந்து கொண்டான்.

ஆனால் ஏதும் பேசவில்லை.

மீராவின்பால் சென்ற தன் நோக்கையும் திருப்பிக் கொண்டான்.

அப்படியே மறைந்து விட்டான்.

ஃ ஃ ஃ

''கிரிதாரி, கிரிதாரி'' என்று அலறியபடி குழந்தை மீரா சந்திரமுகியின் மடியிலிருந்து எழுந்தாள். (தொடரும்)

சென்ற இதழ் 16-ம் பக்கத்தில் ''கூர்ஜரத்தில் கிருஷ்ண பக்தியையே மோக்ஷ மார்க்கமாக்கித் தந்த வல்லபாசாரியரும்'' என்றிருப்பதை, ''கூர்ஜரத்தில் வைஷ்ணவ இலட்சணங்களின் உறைவிடமான நரஸிமேதாவும், மகாராஷ்டிரத்தில் இரண்டாவது வியாசர்போல் மதிக்கப்பெறும் ஏகநாதரும், ஆந்திரத் [தாயின் தலைப்புதல்வராகப் பிறந்து வடபுலமெங்கிலும் கிருஷ்ண பக்தியையே மோக்ஷ மார்க்கமாக்கித் தந்த வல்லபாசாரியாரும்'' என்று வாசித்துக் கொள்ள வேணும்.

[அறிஞர் அண்ணாதுரை அவர்களின் 58 வது பிறந்த தின வைபவத்தின்போது அவர் உருவத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிட்டு மகிழ்கிறோம். பாரதம் இக்கட்டான சரித்திரச் சூழ்நிலையில் சிக்கி அல்லலுற்ற போதெல்லாம் தக்க தலைவர்களைத் தமிழகம் ஈந்து புரந்துள்ளது. அதே பண்பையொட்டித்தான், இன்று தமிழகம் தந்த அண்ணாவை, அவர் பேச்சுக்களை, அவர் செயல் திட்டங்களைக் காஷ்மீர் முதல் கன்னியாகுமரிவரை ஆர்வத்துடன் நோக்கி வருகிறார்கள்! அவர் எடுத்த பணி சிறப்பதாக! அவர் பல்லாண்டு வாழ்க!

— ஆசிரியர்.]

# காலமெல்லாம் வாழ்வார்

முரசொலி மாறன் எம்.ஏ.

"உண்மையில் அவர் ஒரு சக்கரவர்த்திதான்; தூத்துக்குடியிலிருந்து டிம்பக்ட்டு வரை; டிம்பக்ட்டுவிலிருந்து டாஸ்மேனியா வரை; எங்கெல்லாம் தமிழ் பேசப்படுகிறதோ அதுவெல்லாம் அவரது 'ஆளுகைக்குட்பட்ட' பிராந்தியமாகும்... அவர் ஒரு அவதாரம் என்பது போல் மக்கள் போற்றுகிறார்கள். அவர்கள் கருத்துப்படி தமிழ் சிறப்பாகப் பேசப்படுவதும், தமிழ் சிறப்பாக இருப்பதும் 'அண்ணா' பேசும் போதுதான்."

— இது கட்சியைச் சேர்ந்த ஒருவரது புகழுரையல்ல; திரு ஏ. எஸ். ஆர். 'இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி' இதழில் (ஜூலை 18, 1965) அறிஞர் அண்ணாவைப் பற்றி எழுதியிருந்த சில வாசகங்களாகும்.

சுமார் ஐயாயிரம் கிளைகளையும், ஐந்து லட்சத்துக்கும் மேற்பட்ட உறுப்பினர்களையும் கொண்ட திராவிட முன்னேற்றக் கழகத்தின் பொதுச் செயலாளரான அறிஞர் அண்ணா அவர்களுக்கு உள்ள சிறப்பு அவர் ஓர் அரசியல் கட்சியின் தலைவர் என்பதால் மட்டுமல்ல; அவர் ஒரு புதிய சகாப்தத்தின் தோற்றுவாய்! அவர் ஒரு புதிய தலைமுறையின் தந்தை! ஓர் அரசியல் — கலாசார இயக்கத்தின் இயக்குநர்! தமிழ் மொழிக்கும், தமிழ் இனத்திற்கும் புதிய நோக்குத் தந்த புரட்சிக்காரர்!



தமிழ் அவர் நாவிலே நடமாடும்போது; நீர் வீழ்ச்சி போல வார்த்தைகள் தாவி வரும் போது தன்னையே மறக்காதவர்கள் யாரேனும் உண்டா?

அவரது எழுத்துத்தான் என்ன? தமிழ் மொழியிலே அவரது பேச்சும் எழுத்தும்புதிய பாணியைத் தோற்றுவித்தன.

"அவரது சொற்பொழிவுகள் சிலவற்றை நான் கேட்டிருக்கிறேன். சொற்பொழிவு என்றால் இதுவல்லவா சொற்பொழிவு? தட்டுத் தடுமாறி, சொற்களுக்குத் திண்டாடி நிற்பதையெல்லாம் சொற்பொழிவு என்கிறோமே — என்று சொல்லத் தோன்றும்."

— இவ்வாறு பேராசிரியர் 'கல்கி' அவர்கள் சிறப்பித்துக் கூறியிருக்கிறார்.

தமிழ் நாடகத் துறை அவர் கைபட்டுப் புது மெருகு பெற்றது.

"இரண்டு வாரத்துக்கு முன்பு திருச்சியில் 'ஓர் இரவு' என்னும் நாடகத்தைப் பார்த்தேன். பார்த்ததின் பயனாக 'இதோ ஒரு பெர்னாட்ஷா' தமிழ் நாட்டில் இருக்கிறார்! இப்சனும் இருக்கிறார்! இன்னும் கால்ஸ்வொர்த்தியும் இருக்கிறார்' என்று தோன்றியது."

— இவ்வாறு சிறப்பித்துக் கூறியிருப்பதும் பேராசிரியர் 'கல்கி'தான்.

அவருக்கும் அவரது கட்சித் தொண்டர்களுக்கும் உள்ள உறவு ஒரு குடும்ப உறவு. இன்னும் சொல்லப் போனால் குடும்பப் பாசத்தால் கட்சி நடத்தும் ஒரே தலைவர் என்னும் சிறப்பு அவருக்கே உரியது. இருபது வயதுத் தொண்டர் முதல் தள்ளாத கிழவரும் அவரை அழைப்பது 'அண்ணா' என்கிற அடைமொழியால்தான்!

மேடைப் பேச்சில் கண்ணியத்துக்கு முதலிடம் தருவது அவர் தந்த மரபு. அவர் தாக்குவார்; தாக்கப்படுபவரும் அதைக் கேட்பாரேயானால், உண்மை உணர்வாரே தவிர மனம் புண்படமாட்டார்.

பல மாநிலத்துச் சட்டமன்றங்களில் எத்தனையோ விரும்பத்தகாத நிகழ்ச்சிகளெல்லாம் நடைபெறுவதை நாம் பத்திரிகைகளிலே படிக்கிறோம். தமிழக சட்ட மன்றத்திலே பிரதான எதிர்க் கட்சியாக இருக்கும் திராவிட முன்னேற்றக் கழகம் ஒரு மாதிரி



கேலிச் சித்திரக்காரர்களின் கைவரிசையில் பல கோணங்களில் காட்சியளிக்கிறார் அறிஞர் அண்ணா.
1. ராகி; 2. தாணு; 3. கோபுலு; 4. செல்லம்; 5. ராது; 6. ஸ்ரீதர்; 7. கனு; 8. லக்ஷ்மண்; 9. சங்கர்; 10. துரை.

எதிர்க் கட்சியாகத் திகழ்கிறது என்றால், அது அண்ணாவின் தாரக மந்திரமான 'கடமை — கண்ணியம்—கட்டுப்பாடு' என்கிற உபதேசத்தால்தான் !

அவரது தலைமைத் தன்மையைப் பற்றிச் சில வார்த்தைகள்:

"தலைமைப் பதவி பெறுவது சுலபம். ஆனால் அதற்குரிய வகையில் பொறுப்பை வகிப்பதும், பதவியைப் பாதுகாத்துக் கொள்வதும்தான் விசேஷம். அண்ணா அவர்களைப் பின்பற்றுகிறவர்கள் ஏராளமான இளைஞர்கள். இவர்கள் தமது தலைவருக்குக் காட்டும் மரியாதை மிகவும் குறிப்பிடத் தக்கது. பின்பற்றுகிறவர்கள் ஆற்றலும், அனுபவமும், அந்தஸ்தும் உள்ளவர்கள் என்றாலும் எல்லோரும் ஒருமுகமாக அண்ணாவின் தலைமையை மனப் பூர்வமாக ஏற்றுக் கொள்ளுகிறார்கள். அண்ணா சொல்வது பிடிக்கவில்லையே என்றாலும், துடிதுடிப்புள்ள இளைஞர்களும் மறுபேச்சுப் பேச மாட்டார்கள். அண்ணா வகிக்கும் இந்தத் தலைமை மிகச் சிறந்ததாகும். அவர் பேச்சைக் கேட்க வந்திருக்கும் கூட்டத்தின் பக்தியையும், பொறுமையையும் நான் கண்டிருக்கிறேன். அவர் கூட்டத்துக்கு வர எவ்வளவு தாமதமானாலும் கூட்டம் அப்படியே அமைதியாக மணிக் கணக்காகக் காத்துக் கொண்டிருக்கும். கட்சியைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் ஒரு மனத்துடன் தம் தலைவரைப் பேரறிஞராகவும், அண்ணாவாகவும் கொள்கிறார்கள். இது தலைவரின் சிறந்த ஆற்றலைத்தான் வெளிப்படுத்துகிறது."










இந்த வாசகங்கள் தமிழக முதலமைச்சர் கனம் பக்தவத்சலம் அவர்கள் வெளியிட்ட கருத்துரையாகும்.※

※ ※ ※

அண்ணா அவர்கள் ஓர் அரசியல் கட்சிக்கு அப்பாற்பட்டவர்.

ஒருமுறை திரு ராஜாஜி அவர்கள் பொதுக் கூட்டமொன்றில் குறிப்பிட்டார்கள்:

''இந்தித் திணிப்பை எதிர்த்து நான் ஜெயிலுக்குப் போயிருக்க வேண்டும். ஆனால் விருத்தாப்பியம் என்னைத் தடுத்துவிட்டது. நம் எல்லோருக்குமாகச் சேர்ந்து அண்ணா ஜெயிலுக்குப் போயிருக்கிறார்.''

தமிழ் மக்கள் மட்டுமல்ல; இந்தி பேசாத மக்கள் அத்தனை பேரும் இந்தித் திணிப்பு எதிர்ப்புக்கு அண்ணாவையே தங்களது 'ஈட்டி முனை'யாகக் (Spear-head) கருதுகிறார்கள் என்பது வெறும் புகழுரையாகாது.

''உங்களுக்கு நான் பணிவன்போடு தெரிவித்துக் கொள்வேன். இது மொழிப் பிரச்னை அல்ல — இது ஆதிக்கப் பிரச்னையே தவிர மொழிப் பிரச்னை அல்ல... நாம் எந்த அளவுக்குப் பணியத் தயாராக இருக்கிறோம் என்பதைக் கண்காணிப்பதற்காக— அளவிடுவதற்காக — அரசியல் ஆதிக்கக்காரர்கள் தங்களுடைய மொழியைத் திணித்து, 'இதைத்தான் நீ ஆட்சி மொழியாகக் கொள்ள வேண்டும்; இதிலேதான் பாடங்கள் நடக்கும்; இதிலேதான் சட்டங்கள் இயற்றப்படும்; இந்த மொழியிலேதான் பாராளுமன்றத்தில் பேசுவார்கள்; இது தெரிந்தால் இங்கெல்லாம் வா — இது தெரியாவிட்டால் நீலகிரித் தோதுவர்களைப்போல, குருவிக்காரர்களைப் போல, நீயும் உன்னுடைய வீட்டோடு— கூட்டோடு — இரண்டாந்தரக் குடிமகனாய் மட்டரகமான மனிதனாய், ஏனோ தானோவாய், எடுப்பார் கைப்பிள்ளையாய் அடங்கிக் கிட' என்பதுதான் உட்பொருளாகும்''—என்கிற அண்ணாவின் வாசகங்கள் ஒரு கட்சிக்கு அப்பாற்பட்டவையாகும்.

அண்ணா அவர்கள் தமிழிலே பேச்சு நடையிலும், எழுத்து நடையிலும் புதிய பாணியை உண்டாக்கினார். அதனால் தமிழ் உள்ளவரை அவர் வாழ்வார்!

அண்ணா அவர்கள் கலைத் துறையிலே புதிய பாணி கண்டார்; அதனால் கலை உள்ளவரை அவர் வாழ்வார்!

அண்ணா அவர்கள் அரசியலில் கடமை—கண்ணியம்—கட்டுப்பாடு புகுத்தினார்; எனவே அவை உள்ளவரை அவரும் வாழ்வார்!

அவரது 58வது பிறந்த தினத்தன்று தமிழன் எங்கெங்கு இருக்கின்றானோ அங்கிருந்தெல்லாம் வந்து குவியும் வாழ்த்துக்களில் முதன்மை வாழ்த்து அவர் ஆட்சி பீடமேற்றத் துடிக்கும் தமிழ்த் தாயுடையதாகத்தான் இருக்கும்!

---

※ 1959ல் 'முரசொலி' அண்ணா மலருக்கு முதலமைச்சர் வெளியிட்ட வாழ்த்துச் செய்தியிலிருந்து.

# பெப்ஸோடெண்டின் 'இரியம் ப்ளஸ்'

உங்கள் பற்களை
சுத்தம் செய்து
வெண்மை
பளிச்சிடச்
செய்யும்

எப்படி என்று பாருங்கள்: பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இது விஞ்ஞான முறைப்படி பிரத்தியேகமாக கண்டுபிடிக்கப்பட்ட சேர்க்கைப் பொருளாகும். இதனால் ஏராளமாக அற்புத நுரை உண்டாகி உங்கள் வாயின் உட்புறம் முழுவதையும், பற்களையும் நன்றாக சுத்தம் செய்யும்... பெப்பர்மிண்டைப் போல வாய்க்கு குளிர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டும். 'இரியம் ப்ளஸ்'ஸின் தனிப்பட்ட சக்தியால் பற்கள் இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கும். அற்புத வெண்மை அளிப்பது பெப்ஸோடெண்டின் தனிப்பட்ட தன்மை.

இந்துஸ்தான் லீவர்
லிமிடெடின்
ஓர் உன்னத தயாரிப்பு




JWT-HCL-4998

# பார்க்க வேண்டிய படம்

007, 077, 117, Z-55 என்று இப்படியெல்லாம் எண்கள் கொண்ட ஒற்றர்கள் பற்றிய திரைப்படங்கள் சமீப காலமாகச் சென்னையிலும் பிற நகரங்களிலும் சக்கைப் போடு போட்டு வருகின்றன. போதாக் குறைக்கு நம் எம். ஜி. ஆர். அவர்கள் எடுக்கவிருக்கும் ரகசியப் போலீஸ் 115 வேறு! இந்த ஒற்றர்கள் அனைவரும் எட்டு பேர்கள் சூழ்ந்தாலும் எதிர்த்துச் சமாளிக்கக் கூடிய சூரர்கள்! கொடியவர்கள் என்றும் இவர்கள் கையால் அழிவார்கள்! வெற்றி எப்போதும் இவர்கள் பக்கமேதான்! இவர்களது காதலிகளுக்கோ ஒரு கணக்கும் கிடையாது! இப்படியெல்லாம் ஒற்றர்களை உருவகப்படுத்துவது எவ்வளவு அபத்தம் எந்த அளவுக்கு உண்மைக்குப் புறம்பானது என்று தெரிந்து கொள்ள வேணுமானால் நாம் பார்க்க வேண்டிய படம்: Spy from the Cold. ரிச்சர்ட் பர்ட்டன் அமைதியாகவும் அற்புதமாகவும் நடிப்புடன் தமது கம்பீரமான குரலாலேயே நம்மை வசியப்படுத்தும் இப் படத்தில் உண்மையில் ஒற்றர்கள் எவ்வளவு துன்பங்களுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது; உப்புசப்பற்ற அந்தத் தொழிலில் ஈடுபடுவோர் வேண்டா வெறுப்பாக எத்தனை மட்டரகமான முறைகளைக் கையாண்டு எதிரியை வீழ்த்த வேண்டியிருக்கிறது என்பதெல்லாம் அப்பட்டமாகச் சொல்லப்படுகின்றன. லட்சோப லட்சம் பிரதிகள் விற்பனையான நூலினை ஆதாரமாகக் கொண்டு எடுக்கப்பட்ட இப் படத்தைப் பலர் பார்க்க மாட்டார்கள்; — கும்குத்துக்கள், ஜூடோ பிடிகள், நிமிஷத்துக்கு நாலு துப்பாக்கி வெடிச் சத்தங்கள், அழகிய நங்கைகள் ஏதும் இல்லாத காரணத்தால்!



**'கல்கி' அவர்கள் நகைச்சுவை ததும்பப் பேசுவதிலும் எழுதுவதிலும் ஒரு விசேஷம் உண்டு. அவரது ஹாஸ்யங்கள் முன்கூட்டியே சிரமப் பட்டுத் தயாரிக்கப்படுபவை அல்ல! அந்தந்தச் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப இயல்பாகப் பொங்கும் அவர் கற்பனையில். இதோ ஓர் உதாரணம்:**

சுமார் பதினெட்டு ஆண்டுகளுக்குமுன் தியாகராயநகர் பகுதியில் 'கம்பராமாயண' பிரவசனம் தமிழ்ப் புலமை பெற்ற ஒருவர் நிகழ்த்தினார். 'சீதா கல்யாண' வைபவத்துக்குத் திரு கல்கி தலைமை தாங்கினார். அன்று கதை 7–30க்கு ஆரம்பம். கல்கி அவர்கள் ஏழு மணிக்கே வந்து விட்டார்கள். உபந்நியாஸகர் வரவில்லை. சுமார் எட்டு மணி அளவில் உபந்யாஸகர் வந்தார்.

கதைத் தொடக்கத்தில் சபையில் உள்ளவர்கள் தம்மை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டார். தாமதமாக வந்ததற்குக் காரணமும் சொன்னார். அவர் வில்லிவாக்கத்தில் வசிப்பவர். வீட்டிலிருந்து ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்தபின் தம் பையைப் பார்த்தால் சில முக்கிய குறிப்பேடுகள் அதில் இல்லை. ''என்றைக்கும் எங்கு சென்றாலும் இந்தக் குறிப்பேடுகளை என்னுடனே எடுத்துச் செல்வேன். ஆகவே, மீண்டும் வீட்டுக்குச் சென்று அந்தக் குறிப்பேடுகளை எடுத்து வந்தேன். அதனால்தான் தாமதம்!'' என்றார்.

அதன்பின் கதை மிகவும் சுவாரசியமாக ஓடியது. ''முடிவில் உபந்யாஸகர் இன்று இங்கு வந்து கேட்ட எல்லோருக்கும் புண்ணியம் உண்டு. சந்தேகமில்லாமல் எல்லோருக்கும் சுவர்க்க பதவி கிடைக்கும்'' என்றார். இச் சமயத்தில் கல்கி அவர்களைப் பேசுமாறு கேட்டுக் கொண்டார்.

கல்கி அவர்கள் தமக்கே உரிய பாணியில் பேச ஆரம்பித்தார்: ''உபந்யாசகர் ரொம்பத் திறமைசாலி. முகூர்த்தத்துக்குத் தாமதமாக வந்தாலும் குறித்த நேரத்துக்குள் கல்யாணத்தைச் சுபமாக முடித்து விட்டார். எல்லோருக்கும் சுவர்க்கம் கிடைக்கும் என்றார். கேட்டவர்களுக்கே சுவர்க்கம் என்றால், கதையைச் சொன்னவர்க்கு நிச்சயம் சொர்க்கவாசம் உண்டு. சந்தேகமில்லை! அப்படி உபந்யாஸகர் சொர்க்கத்துக்குப் போனால் எங்கு சென்றாலும் விடாமல் எடுத்துப் போகும் குறிப்பேடுகளை ஞாபகமாக எடுத்துச் செல்ல வேண்டும். ஏனெனில் சொர்க்கத்திலிருந்து மீண்டும் வில்லிவாக்கத்துக்குத் திரும்பி வந்து எடுத்துப் போக முடியாது அல்லவா?''

சபையில் எழுந்த சிரிப்பொலி சில நிமிஷங்கள் வரை கல்கியை மேலே பேச விடாமல் தடுத்துவிட்டது. — பட்டாபிராமன்



## கொறித்துக் கொண்டே யிருக்க வேண்டும்



எலி, அணில்கள் போன்றவற்றின் கொறிக்கும் பற்கள் எப்போதும் வளர்ந்து கொண்டேயிருக்கின்றன. இவை அளவுக்கு அதிகமாக வளர்ந்து விட்டால் கஷ்டம் அவைகளுக்கு ஏற்படும். எனவே வளர்ச்சி வேகத்தில் தேய்வு ஏற்பட்டால்தான் நிலைமையைச் சமாளிக்க முடியும். இதனால் தான் அவை எப்போதும் கொறித்துக் கொண்டேயிருக்கின்றன. தங்களால் உண்ண முடியாதவற்றைக்கூட இக் காரணத்தால் சும்மாவாகிலும் கொறித்துக் கொண்டிருக்கின்றன.

தகவல்: என்.பி.எம்

சிந்தனைக்கு :

ஒரு மனிதன்
ஒரு புலியைக் கொல்ல
விரும்பினால்
அதற்குப் பெயர் வேட்டையாடுதல்.
ஆனால் ஒரு புலி
ஒரு மனிதனைக் கொன்றால்
அதற்குப் பெயர் மிருகத்தன்மை.

தகவல்: எறும்பு.



ஒரு நீண்ட சதுரமான காகிதத்தை எடுத்துக் கொண்டு அதை மூன்று பாகங்களாகக் கிழிக்க வேண்டும். முழுதும் கிழிக்கக் கூடாது. ஒவ்வொரு பாகத்தின் சிறு பகுதியும் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக் கொண்டிருக்க வேண்டும். (படம் பார்க்கவும்) பிறகு இரு நுனிகளையும் இரு கைகளால் பிடித்து இழுத்து, அக்காகிதத்தை மூன்று துண்டுகளாக்குங்கள், பார்க்கலாம்! ரொம்ப சுலபம் என்றுதான் தோன்றும். செய்து பாருங்கள்! முடியவே முடியாது!

— ச. ஜகந்நாதன்



## துங்குவுக்குத் தமிழர் பரிசு



மலேசிய இந்தியர்களின் அரசியல் நலன்களுக்காக இருபது ஆண்டுகளுக்கு முன்னர் உருவான மலேசிய இந்தியர் காங்கிரஸ், அதன் இருபதாம் ஆண்டு நிறைவையொட்டிப் பொன்னான நல்லவர் துங்குவுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தது. பொற்றாம்பாளமும் வழங்கப்பட்டது. துங்கு ஓர் இளவரசர். மக்களுக்காக உழைக்க அரசாங்க உத்தியோகத்தை உதறியவர். தமது பணியைப் பூர்ணமாய் நிறைவேற்றப் பல சொத்துக்களையும் ஒன்றன்பின் ஒன்றாக விற்றவர். மலேசியாவில் இன்று ஒப்பற்ற தேசிய சமுதாயம் ஒன்றை உருவாக்கியவர். இத்தகைய செம்மலுக்கு இந்தியர்கள் அளித்த சிறப்பு மறக்க முடியாததொன்றாகும்.

## மூன்று காற்று



பெண் திருமணமாவதற்கு முன் ஒருவனுக்குத் தென்றல் காற்றாக இருக்கிறாள். திருமணம் ஆன பின் வாடைக் காற்றாக இருக்கிறாள். குழந்தை குட்டிகள் பிறந்த பின் புயல் காற்றாக மாறுகிறாள். இதற்கிடையில் ஆண் என்ன பாடு படுகிறான் — தூசியைப் போல.

— சந்திரதாசன்



# ஆயிரம் ஆண்டுகள் வாழ!

மனிதனுடைய வாழ்நாளை அதிகமாக்குவது, உண்மையிலேயே மருந்துகள்தான். சமீப காலத்துக்குள், அதாவது இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் மருந்துகள் எல்லா வியாதிகளையும் அழித்து, வெற்றியடையும் என்பதில் ஐயமில்லை.

1965-ஆம் ஆண்டு, பைலோ ரஷ்ய விஞ்ஞான அக்கடமியின் தலைவரான வி. குப்ரவிச் என்பவர் எழுதியதாவது:

''மருந்துகளின் மூலம்தான் நீண்ட நாள் வாழமுடியும் என்று கொண்டால் அதற்கும் ஓர் எல்லை உண்டு. 100 — 120 ஆண்டுகளாக மனிதனின் சராசரி உயிர் வாழ் காலத்தை நீடித்துவிடுவதாக வைத்துக் கொள்வோம். அதன் பின்னர்...? காலத்தின் போக்கில் இயற்கையாகவே உயிர்ப் பொருள்கள் முதிர்ச்சி யடைகின்றனவே; அதற்கு என்ன செய்வது?''

100 அல்லது 150 வயதுவரை மனிதன் வாழ முடியும் என்பது உண்மைதான். தற்போது சோவியத் யூனியனில் 217,000 பேர்கள் நூறு வயதைக் கடந்துள்ளனர்.

நரம்பு மண்டலத்தில்தான் முக்கியமான சிக்கல்கள் உள்ளன. மனித உயிர்களின் திசுக்களும், செல்களும் தொடர்ந்து புதுப்பிக்கப் படுகின்றன. ஆனால் மூளை மட்டும் எவ்வித மாற்றமும் இன்றி இருக்கிறது. நாளடைவில் வயது முதிர்ந்த காலத்தில் மூளையானது களைத்துத் தேய்ந்து போகிறது. விஞ்ஞானக் கணிப்பின்படி, மனிதனுடைய செல்கள் அனைத்தும் ஏழு வருடங்களுக்கொரு முறை முழுமையாகப் புதுப்பிக்கப் படுகின்றன. இதற்கு விதிவிலக்கு நரம்பு செல்கள்மட்டுமே.

அண்மையில் மூளை செல்கள்கூடப் புதுப்பிக்கப்படக் கூடியதே என்பது நிரூபிக்கப் பட்டது. அறிஞர் குப்ரவிச்சின் கருத்துப்படி, ''இன்னும் சிறிது காலத்தில் செல்களைப் புதுப்பிக்கும் முறை பற்றி நாம் அறிந்து கொள்வோம். வருங்காலத்தில் -செல்களைப் புதுப்பிக்கும் முறை கையாளப் படும் காலத்தில் — மனிதன் 1000 வருடங்கள் வாழ முடியும். அப்பொழுது அவன் அநேகமாகச் சிரஞ்சீவியாக இருப்பான். திசுக்களையும், நரம்பு மண்டலத்தையும் புதுப்பிப்பதே மருத்துவத் துறையின் அடிப்படையாக இருக்கும்.''

எனினும், 'சிரஞ்சீவி' என்ற வார்த்தையை நாம் உபயோகிக்க முடியாதுதான். ஒரு சிறு விபத்தின் காரணமாகவும் மனிதன் மடியக் கூடுமல்லவா?

ஐ. அதபஷேவ்

(சோவியத் சிறப்புக் கட்டுரை)

# நடந்ததுதான் நம்புங்கள்!

கூறியவர்: திரு டி. வி. திருவேங்கடாச்சாரி

ரிடயர்டு போலீஸ் இன்ஸ்பெக்டர்

கேட்டுக் கதைபோல் எழுதியவர்: 'மேஜு'



மணியக்காரர் வீட்டுப் பிள்ளையாண்டான் மாணிக்கத்தைக் காணலியாம்.

பூந்தமல்லியிலே இருக்கிற பேத்தி வீட்டுக்குப் பத்து நாட்கள் போயிருந்து விட்டு ஊருக்குத் திரும்பி வந்தவுடனே காதிலே விழுந்த சேதி இதுதான்.

''மாணிக்கம் என்ன சின்னப் பயலா, வழி தவறிக் குளம் குட்டைப் பக்கம் போகலோ, தோப்புத் துரவுப் பக்கம் போகவோ? இருபத்திரண்டு வயசுக் காளையில்லே! காதிலே சிவப்புக் கல் கடுக்கனும், இடுப்பிலே வெள்ளி அரைஞாணும் போட்டுக்கிட்டு, ஊரை வளையவந்து கொண்டிருப்பான். 'பத்துக் கிளாஸ் படிச்சது போதும்! நிலபுலன்களைப் பார்த்துக்கிட்டு ஊரோடே இருந்துடு'ன்னு மணியக்காரர் மகனைப் பார்த்துச் சொல்லிட்டாரு! அவனும் சரின்னுட்டான். எப்பவாவது என் பக்கம் வரபோது இன்னையிலே என்னைப் பார்த்தான்னு 'என்ன தாத்தா? சௌக்கியமா?'ன்னு கேட்காமே போக மாட்டான். தங்கமான பிள்ளை!

ஒருவேளை பட்டணத்துக்குச் சினிமாப் பார்க்கிற ஆசையிலே போயிட்டானோ. இல்லே ஏதாவது வயசுக் கோளாறுலே காதல் கீதல் விவகாரத்திலே மனத்தாங்கலா எங்கேயாவது போயிட்டானோன்னு தோணிச்சு!

ஊரிலே மாணிக்கத்தோட தோழன்னு சொல்லணும்னு அந்தக் கந்தவேலுப் பயலைத்தான் சொல்லணும். அவன் மாணிக்கத்தோட படிச்ச பயல். அவனுக்கு வேலை வெட்டி இல்லே. எப்பவும் மாணிக்கத்தோட நிழல் மாதிரி சுத்திக்கிட்டு இருப்பான். சாப்பாடு, காப்பி யெல்லாம் பாதி நேரம் மணியக்கார வீட்டிலே ஓசியிலே நடந்துடும்.''

''அந்தக் கந்தவேலுப் பயல் என்ன சொல்லுறான்? அவனுக்குத் தெரியாமல் மாணிக்கம் ஒண்ணும் செய்ய மாட்டானே?'' என்று அம்மன் கோயில் பூசாரியை விசாரிச்சேன்.

''அவன் தனக்கு ஒண்ணும் தெரியாதுங்கறான்!'' என்று பூசாரி கூறிப் போனார்.

பொழுது சாயற நேரத்திலே வயத்தைக் கலக்குறப்போலே சேதி வந்துடுத்து. பனந்தோப்புக்கு அப்பாலே இருக்கிற கருவேலம் புதருக்குள்ளே ஒரு பள்ளத்திலே மாணிக்கத்தோட உடம்பு பிறந்த மேனிக்குக் கிடந்ததாம். கடுக்கன், அரைஞாணோட, அவன் வேட்டி துண்டைக்கூட இல்லே காணோம்! போலீஸுக்கு ஆள் பறந்தது.

அம்மன் கோவில் பூசாரி மாத்திரம் என்னவோ ஆவேசம் வந்தவர் போல ஓங்கி அடிச்சுச் சொன்னாரு. ''இந்தக் கந்தவேலுப் பயல் முழிக்கிறது சரியாயில்லே. அவனுக்கு ஏதாவது விஷயம் தெரிஞ்சிருக்கும்''னு பேசினாரு. உடனே நாலு பேராகச் சேர்ந்து கந்தவேலுவை இழுத்து வந்து வேப்ப மரத்திலே கட்டிப் போட்டாங்க. ''ஐயோ! எனக்கு ஒண்ணும் தெரியாதே''ன்னு அவன் அலறினான்.

போலீஸ் சர்க்கிள் ஐயாவே ஆட்களோட வந்துட்டாரு. மாணிக்கம் பயல் பிணத்தைப் பரிசோதனைக்குச் செங்கல்பட்டு ஆஸ்பத்திரிக்கு அனுப்பிச்சுட்டு, தம் விசாரணையை ஆரம்பிச்சாரு. மரத்தோட மரமா நின்ன கந்தவேலுவிடம் என்னவெல்லாமோ கேட்டாரு. அவன் ஒண்ணும் தெரியாதுன்னு சாதிச்சான்.

''இந்தா! எதுக்கும் இவன் வீட்டைச் சோதனை போட்டுட்டு வா! காணமற் போயிருக்கிற பொருள்கள் ஏதாவது இருக்கான்னு பார்ப்போம்'' என்றார்.

'சோதனை' பண்ணப்போன ரெண்டு கான்ஸ்டேபிள்களும் சீக்கிரமே திரும்பி வந்துட்டாங்க. ''அது ஒரு சின்ன ஓலைக் கூரை வீடுங்க! அங்கே ஒண்ணையும் காணலே!'' என்று சொன்னாங்க.

சர்க்கிள் ஐயா ஒரு நிமிஷம் யோசிச்சாரு. பக்கத்திலே நின்ன இன்ஸ்பெக்டருக்கும் ஜவான்களுக்கும் சைகை காட்டிவிட்டு, ''எதுக்கும் நாமே போய்த் தேடிப் பார்த்துட்டால் ஒரு திருப்தி ஏற்படும்''னு சொல்லிக் கிளம்பிட்டாரு.

கந்தவேலுவின் அப்பனும் ஆத்தாளும் ரொம்ப அப்பாவிங்க. இருக்க இடம்னு ஓர் ஓலைக் குடிசை தான். பேருக்குக் கொஞ்சம் நஞ்சையும், ஒரு புஞ்சைக் காடும் இருந்தன. சாப்பாட்டுக்குத் திண்டாடற குடும்பம்.

''அந்தக் குடிசைக்கு அப்பாலே ஒரு வைக்கோல் போர் இருந்தது. அது கந்தவேலுவோட அப்பனுக்குச் சொந்தம்.''

''ஏனப்பா! அந்த வைக்கோல் போரைப் பார்த்தீங்களா?'' என்று சர்க்கிள் ஐயா ஒரு ஜவானைப் பார்த்துக் கேட்டார்.

அவர் இல்லேன்னு தலையை ஆட்டினார்.

''நமக்கு எதையும் விட்டுவிடச் சட்டத்திலே இடமில்லே. அதையும் பார்த்துவிட வேண்டியதுதான்! நடக்கட்டும்!'' என்று உத்தரவிட்டார் சர்க்கிள்.

நாலு பிரி வைக்கோலை உருவினபோதே உள்ளே யிருந்து ஒரு வேட்டியும் துண்டும் தொப்பென்று வெளியே வந்து விழுந்திடுச்சு. அது மாணிக்கம் பயலோட வேட்டி துண்டுன்னு அடையாளம் சொல்லிட்டாங்க. வேடிக்கை பார்த்தவங்களுக்கெல்லாம் திகிலாப் போச்சு. ஒரு போலீசுக்காரரு போய்க் கந்தவேலுவை அப்படியே கட்டோட இழுத்துக்கிட்டு வந்து நிறுத்தினாரு.

''என்ன தம்பி! வேட்டியும் துண்டும் வைக்கப் போரிலேருந்து கிடைச்சிருச்சு! மற்ற சாமான்களை எங்கே வச்சிருக்கே?'' என்று சர்க்கிள் கேட்டாரு சிரிச்சுக்கிட்டே.

''என்ன சார்! நீங்களா எதையோ கொணந்து வச்சுட்டு இப்போ நீங்களே எடுத்தீங்க? எனக்கென்ன தெரியும்?'' என்றான் கந்தவேலு திமிராக.

''சரி தம்பி! மற்றதையும் நாங்களே எடுத்துக்கிடுறோம்'' என்று கோபப் படாமலே சொன்ன சர்க்கிள் ஐயா பக்கத்திலிருந்த போலீஸ்காரங்களைப் பார்த்து, ''முதல்லே இந்த வீட்டுக் கூரையைப் பிரிச்சுப் போட்டுப் பாருங்க. அதிலே ஒன்னும் கிடைக்கலேன்னா நாலு பக்கத்துச் சுவரையும் தரை மட்டமாக்கித் தேடிப் பார்த்துடுங்க'' என்றார். போலீஸ்காரங்க கடப்பாரையும் கையுமாகக் கிளம்பிட்டாங்க.

கந்தவேலுவோட அப்பனும் ஆத்தாளும் 'குய்யோ முறையோ'ன்னு அலற ஆரம்பிச்சாங்க. இருக்கிற வீடு தரைமட்டமாயிருச்சுன்னா இருக்கிறதுக்கு நிழல் வேண்டாமா?

''அடப் பாவிப் பய மகனே! உன்னைப் பெத்ததற்கு இப்ப நாங்க சந்தியிலே நிக்க வேண்டி வந்திடுச்சேடா!'' என்று அவன் அம்மாக்காரி அலறினாள். அவள் அலறலுக்குத் தாளம் போடுகிற மாதிரி கடப்பாரை களிமண் சுவரிலே 'டங்'கென்று பாய்ந்தது.

''நிறுத்துங்க!''ன்னு கந்தவேலு போலீஸ்காரர்களைப் பார்த்துக் கத்தினான். ''அந்த அரைஞாண் இருக்கிற இடத்தைச் சொல்லிடறேன்....பிள்ளையார் கோயிலுக்குப் பின்னாலே இருக்கிற மரப் பொந்திலே வைச்சிருக்கேன்! கடுக்கன் இரண்டையும் இப்போ என்னைக் கட்டிப் போட்டிருந்தீங்களே அப்ப காலாலேயே சின்னக் குழி தோண்டி மடியிலிருந்த கடுக்கன்களைப் போட்டு மூடியிருக்கேன்! வீட்டை ஒன்னும் பண்ணாதீங்க. நான்தான் மாணிக்கத்தைக் கொன்னுட்டேன்'' என்று அலறினான்.

அப்புறம் போலீஸ் நடவடிக்கை ஜரூராக நடந்தது. கந்தவேலுவை லாக்கப்புக்குக் கொண்டு போயிட்டாங்க. கேசு நடந்தது.

மாணிக்கமும் கந்தவேலுவும் வழக்கம் போலே சாயங்காலம் மோட்டார் ரோட்டிலே தான் கொஞ்ச தூரம் நடப்பாங்க. அன்னிக்குச் சாயங்காலம் ஏரிக்கரையைப் பார்க்கக் குறுக்கு வழியிலே போகலாம்னு கந்தவேலு சொல்லியிருக்கான்.

பனந்தோப்புக்குள்ளார நுழைஞ்சப்போ கந்தவேலுப் பய சட்னு மாணிக்கம் முகத்திலே தன் துண்டைப் போட்டு மூடிக் கழுத்தை இறுக்கிட்டான். ஆட்டம் குளோஸ்! அப்புறம் சப்ஜாடா வேட்டி துண்டு, அரைஞாண் கடுக்கன் எல்லாத்தியும் கழட்டிட்டுக் கந்தவேலுப்பயல் நடத்திட்டான்.

விசாரணை எல்லாம் ஒழுங்காக நடந்தது. எதிர்த் தரப்பிலே ஆஜரான வக்கீல் தன்னாலே முடிஞ்சவரை கந்தவேலுவைக் காப்பாத்த முயற்சி பண்ணினாரு. கந்தவேலு அதற்கு இடம் கொடுக்கல்லே! ''என்னைப் போலீசுலே அடிச்சு வதைச்சு யாரும் வாக்குமூலம் வாங்கல்லே! நானாகவே வாக்குமூலம் கொடுத்தேன். நான் கொலைகாரன் தான்''னு சொல்லிப்பிட்டான்.

ஜட்ஜ் தூக்குத் தண்டனை போட்டுட்டாரு.

பெரிய ஜெயிலுக்கு அவனை மாத்தறதுக்கு முன்னாலே அந்தக் கொலைகாரப் பயலைப் பார்க்கணும்னு போனேன்.

''அடப் பாவிப்பய மகனே! சின்னக் குழந்தையா யிருக்கிற போதிலிருந்தே இதே இதமா இருந்தீங்களேடா! அவன் வீட்டு உப்பை எவ்வளவு தின்னுருப்பே! எப்படிடா அவன் மென்னியைப் பிடிக்க உன் கை துணிஞ்சுது?'' என்று கேட்டுப்பிட்டேன்.

''தாத்தா!... நான் போலீஸ்காரனுகச் சேர அப்ளிகேஷன் போட்டிருந்தேன். என்னைத் தேர்ந்தெடுத்திட்டாங்க! வேலூர் போலீஸ் பள்ளிக்கூடத்துக்கு வந்து சேரணும்னு உத்தரவும் வந்திடுச்சு. இருபத்தஞ்சு ரூபாய் என்னவோ முதலிலே கட்டணுமாம். கையிலே காலணா கிடையாது. அப்பாரு கிட்டேயும் இல்லே. ரயில் சார்ஜ் வேறே வேண்டியிருந்தது. பணம் கிடைக்கிற வழியில்லே. உத்தியோகத்தை விட மனசு இல்லே. அந்த வெறியிலே மாணிக்கத்தோட அரைஞாணும் கடுக்கனும்தான் கண்ணுக்குத் தெரிஞ்சதே தவிர, அவனோட உயிரின் மதிப்பு எனக்குப் புரியலே! கொலைகாரனாயிட்டேன்!'' கந்தவேலு கண்ணிலே அப்போ நான் ஈரத்தைக் கண்டேன்.

''இன்னைக்குக் கூட சிவப்புத் தொப்பியை எங்கேயாச்சும் கண்டால் போதும், எனக்கு உடனே காவலனாக விளங்க ஆசைப்பட்டு அதுக்காகவே கொலைகாரனாக மாறிய மாணிக்கத்தின் நினைவு டக்குன்னு வந்துடும். நெஞ்சை ஏதோ வந்து அடைக்கும்.''



ஸ்டோர்வெல்
வீட்டிற்கோர்
அணிகலம்





ஸ்டோர்-
வெல்
சிறந்த ரீதி
யில் உழை
க்கிறது.



வாழ்நாள்
முழுவதும்
போற்றப்படும்
ஸ்டோர்வெல்
லுக்கீடான
பரிசு வேறொ
ன்றில்லை.

பத்திரமாயும், ஒழுங்கான முறையில் சாமான்களை வைக்கக்கூடியதும், திருடர்களிடமிருந்தும், நெருப்பிலிருந்தும் பாதுகாப்பு அளிப்பதுமான சாதனம் சுருங்கக்கூறின் — ஸ்டோர்வெல் ஆகும்.

# உங்களுக்கு இன்றியமையாதது

துருவைத் தடுக்கும் ஒப்பற்ற பாதுகாப்புடையதும், பிரத்தியேக அம்சங்கள் பொருந்தியதும் பிரம்மாண்ட அளவில் தயாரிக்கப்படுவதுமான இந்த அற்புத சாதனத்தை, நியாயமான பேரம் எனக் கருதப்படும் விலைக்கு நீங்கள் பெறலாம்

# ஸ்டோர்வெல்



1981 மிமீ உ × 914 அ × 483 மிமீ ஆ
(78" உ × 36" அ × 19" ஆ)

காட்சியில் வைக்கப்பட்டிருக்கும் பல்வேறு ஸ்டோர்வெல் மாடல்களை கோத்ரெஜ் காட்சிசாலையிலாவது அல்லது இந்தியா முழுவதுமுள்ள ஸ்டாக்கிஸ்ட்களிடமாவது பார்வையிடுங்கள்.

Godrej

கோத்ரெஜ்

ST.1/A TAM.

# முள்ளும் மலரும்

உமாசந்திரன்

அத்தியாயம் 7

அன்று வெள்ளிக்கிழமை. அதிகாலையிலேயே மங்கா வள்ளியைத் தேடி வந்து விட்டாள். இப்போதெல்லாம் கன்னிமூலை கௌரியம்மன் கோயிலுக்குப் போவதற்கு வள்ளியைவிடத் துடியாக முன்வந்து நிற்பது மங்காவின் வழக்கமாகி விட்டது. அது அவளுக்குப் புதுமை நிறைந்த வேடிக்கையாகவும் விளையாட்டாகவும் இருந்தது.

உள்ளே வருவதற்காக வெளிக் கதவைக் கட்டியிருந்த கயிற்றை அவிழ்க்க அவள் முயன்று கொண்டிருந்த நேரத்தில் அப்போதுதான் வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்த காளியண்ணன் அங்கு வந்து நின்றான். கயிற்றின் முடிச்சு கைவிரல்களுக்கு அசைந்து கொடுக்காதிருக்கவே, மங்கா கதவோடு கதவாகக் குனிந்து கயிற்



றைப் பல்லால் கடித்து அவிழ்க்க முயன்று கொண்டிருப்பதைப் பார்த்து அவனுக்கு எரிச்சலாய் வந்தது.

''ஏ, மங்கா! என்ன வேலை இது?'' என்று கேட்டான் அதட்டலாக.

தலை நிமிர்ந்த மங்கா எதிரே காளியண்ணன் நிற்பதைப் பார்த்ததும் தலையைச் சிலிர்ப்பி விட்டுக் கொண்டு முறைப்பாக முகத்தை வைத்துக் கொண்டாள்.

''இந்த வேலிக்குக் கதவு மட்டும் போதாதா? கயிற்றை வேறே கட்டி வெக்காட்டி என்னவாம்?''

''தொறந்த வீட்டைப் பார்த்தால் நாய்கூடத் தாராளமா நுழைஞ்சிடும். தெரியுமில்லே.''

''நாய்தான் உங்க வீட்டைத் தேடி வரும் போலிருக்கு!''

''சாதாரணமா வர்றவங்க கயித்தைக் கடிக்க மாட்டாங்க'' என்று குத்தலாகக் கூறிக் கொண்டே காளியண்ணன் கதவை அனாயாசமாகத் திறந்து கொண்டு வெளியே சென்றான்.

இரண்டு கைகளையும் இடுப்பில் ஊன்றிக் கொண்டு விறைப்பாக நின்ற மங்கா அவன் சென்ற திசையையே முறைத்துப் பார்த்தாள்.

''ஹூம், ஆளைப் பாரு!'' என்று மோவாயைத் தோளில் இடித்து அழகு காட்டிவிட்டு விடுவிடென்று வீட்டுக்குள் சென்றாள்.

''வள்ளி.... வள்ளி....''

அடுப்படியில் வேலையாயிருந்த அஞ்சலையத்தைதான் பதிலுக்குக் குரல் கொடுத்தாள்.

''வா மங்கா, வள்ளி வாய்க்கால்லே முழுகப் போயிருக்கா, நீ முழுகிட்டே வந்திட்டயா ?''

''முழுகறதா.... அதுக்குள்ளேயுமா? போகும்போது அருவிக்கரையிலேயே முழுகிட்டுப் போயிடலாம்னு நெனைச்சேன். போனாப் போகுது. வள்ளியக்கா என்ன செய்யுதோ அதுதான் எனக்கும். நானும் வாய்க்காலுக்குப் போயி முழுகிட்டு வந்திரட்டுமா?''

''டீ கொஞ்சம் மிச்சமிருக்கு. சாப்பிட்டுட்டுப் போயேன்'' என்று அலுமினியக் குவளையை அவள் பக்கம் நகர்த்தினாள் அத்தை.



''நானா வேண்டாம்னு சொல்லப் போறேன்?'' என்று கூறிய மங்கா ஒரே மூச்சில் அந்த டீயைக் குடித்து விட்டுக் குவளையைக் கீழே உருட்டி விட்டாள். பின்பு தோட்டத்தில் குதித்தோடிச் சென்று வாய்க்கால் தண்ணீரில் தொப்பென்று விழுந்தாள்.

''மங்கா, மெள்ள. வாய்க்கால்லே நிறையத் தண்ணி விடறாங்க இன்னிக்கு. காலை இழுத்திடப் போகுது. ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தாள் வள்ளி.

''காலை இழுத்தால் என்ன நஷ்டம்? வாய்க்காலோட உருண்டு கிட்டே போயி ஏரிக்கரையை எட்டிடலாமே. அந்த நடை மிச்சம்தானே! அப்படியே நேரே டிராலியிலே ஏறி உக்காந்து ஜம்னு கன்னிமலைக்குப் போயிடலாம்'' என்று கூறிச் சிரித்தாள் மங்கா.

''முழுகறதுதான் முழுகறே, தலைக்கு எண்ணெய் வெச்சிக்கிட்டு முழுகறது தானே?'' என்றாள் வள்ளி, கண்களை மூடிக் கொண்டு, தலைக்குச் சீயக்காய் தேய்த்தவாறு.

''ம்..... தலைக்கு எண்ணெய் வைச்சு முழுகுகற பழக்கமே என்கிட்டே கிடையாது. எண்ணெய் போகறதுக்குச் சீயக்காய் தேய்ச்சா அது என் கண்ணு ரெண்டிலேயும் விழுந்து தொலைக்கும். கண் எரிச்சலோட கன்னிமலைக்குப் போறதிலே என்ன குஷி இருக்கு?'' என்று கூறிய மங்கா, வள்ளி கண்ணைத் திறக்க முடியாமல் தவிப்பதைப் பார்த்துச் சிரித்தவாறே அவள் மேல் தண்ணீரை வாரி வாரி இறைத்தாள்.

''பொறு, மங்கா, நல்லா தேய்க்கறதுக்கு முன்னே தண்ணியை ஊத்தினால் எண்ணெய் விடாது'' என்றாள் வள்ளி.

இருவரும் குளித்துவிட்டு வருவதற்குள் அஞ்சலையத்தை இருவருக்கும் சூடாகச் சுக்குத் தண்ணி போட்டு வைத்திருந்தாள். விவரம் தெரியாமல் அதை ஒரே மூச்சில் குடிக்க நினைத்த மங்கா ஒரு மிடறு உள்ளே போனதுமே துள்ளித் துள்ளிக் குதிக்க ஆரம்பித்து விட்டாள்.

''ஐயோ.... டீன்னு நினைச்சேனே... சுக்குத் தண்ணின்னு எனக்குத் தெரியவே தெரியாதே...!'' என்று வாயைத் துடைத்து விட்டுக் கொண்டு நிலை கொள்ளாமல் தவித்தாள்.

''போனாப் போகுது. கொஞ்சம் பாலைக் குடி. சரியாப் போகும்'' என்று குவளையில் பாலை ஊற்றிக் கொண்டு வந்தாள் அத்தை.

''வேண்டாம். வேண்டாம். அது ஆட்டுப் பாலாயிருக்கும்'' என்று தன் முகத்தைக் கோணிக் கொண்டாள் மங்கா.

''இல்லேன்னா கொஞ்சம் மோராவது சாப்பிடு.''

''மோரா.... ஐயையோ.... மோர் இருக்கற பக்கம் போனாலே எனக்குத் தனுப்புப் பிடிச்சுக்குமே'' என்று மீண்டும் தன் தவிப்பைத் தொடர்ந்தாள் மங்கா.

வள்ளி எங்கிருந்தோ தேன் பாட்டிலைத் தேடிப் பிடித்துக் கொஞ்சம் தேனை அவள் நாக்கில் தடவும் வரையில் மங்காவின் தவிப்பும் அடங்கவில்லை; கூச்சலும் அடங்கவில்லை.

வெள்ளிக்கிழமையன்று வள்ளி காலையில் பலகாரமோ சாப்பாடோ எதுவும் சாப்பிடுவதில்லை. எவ்வளவு நேரமானாலும் சரி, கன்னிமலை கௌரியம்மனுக்குப் படையல் படைத்துவிட்டுத் திரும்பி வந்த பிறகுதான் சாப்பிடுவாள். கன்னி மலைக்குப் போய் வருவதில் இந்த ஒரு விஷயம்தான் மங்காவுக்குப் பெரிய இடைஞ்சலாயிருந்தது.

''அப்பப்பா.... காயக் காய அம்மாந்தூரம் போய் வரதுக்குள்ளே எப்படிக் கண்ணை இருட்டிக்கிட்டு வந்திடுது, தெரியுமா?'' என்றாள் மங்கா வள்ளியிடம்.

''நான்தான் விரதம் வச்சிக்கிட்டிருக்கேன், அதுக்காக நீ ஏன் சாப்பிடாமே இருக்கணும்?'' என்றாள் வள்ளி.

''ஆமாம், மங்கா! காளி தம்பிக்காக இன்னிக்குத் தோசை சுட்டேன். வேண்டிய தோசை கிடக்கு. சாப்பிட்டுட்டுப் போயேன்'' என்று ஆசை காட்டினாள் அஞ்சலையத்தை.

அந்த நப்பாசைக்கு எங்கே இடம் கொடுத்து விடுவோமோ என்று அஞ்சியவள் போல் மங்கா இரண்டு காதுகளையும் பொத்திக் கொண்டாள்.

''எங்க வள்ளியக்கா காயக் காய இருக்கும் போது நான் வயிறு ரொம்பச் சாப்பிட்டுடுவேனா... அந்தப் பாவம் மட்டும் ஒரு நாளும் செய்ய மாட்டேன்'' என்றாள் கண்களை உருட்டி உருட்டி விழித்தவாறு.

வள்ளி சிரித்துக் கொண்டே அவளைக் கட்டிக் கொண்டாள்.

இருவரும் வழக்கம் போல் காளியண்ணனின் உடும்புக் கொட்டகைக்குப் போய் அங்கிருந்து டிராலியில் கன்னிமலைக்குச் செல்வதென்ற திட்டத்துடன் வீட்டை விட்டுப் புறப்பட்டனர். வழியில் வள்ளி தான் புதிதாகக்

இருவிதமாக இயங்கும்

# குடிகூரா
## ஆயின்ட்மென்ட்

### உங்கள் சருமத்திற்குத் தேவைப்படுவது ஏன்

குடிகூரா ஆயின்ட்மென்ட் சருமத்தில் கருப்புமச்சங்கள் பருக்கள் படைகள் முதலியவற்றிற்குக் காரணமான கிருமிகளை அழித்து உங்கள் சருமத்திலிருந்து இத்தத்தோல்வியாதிகளை அறவே நீக்கி விடுகிறது. குடிகூரா ஆயின்ட்மென்டிலுள்ள ஊடுருவிச் செயலாற்றும் ஆன்டிஸெப்டிக் தைலங்கள், சுட்ட புண்கள், சருமவெடிப்புகள், திருப்புகள், சேற்றுப்புண்கள், பூச்சிக்கடிகள், மேகப்படை முதலியவற்றிலிருந்து இதமான நிவாரணமளிக்கின்றன.

மேலும், குடிகூரா ஆயின்மென்ட் துரிதமாக உங்கள் சருமத்திற்கு மீண்டும் ஆரோக்கியத்தை அளித்துக்கொண்டே அதே சமயம் சருமத்தை லேசாக ஊக்குவித்து செம்மைப்படுத்துகிறது—சருமத்தை மிருதுவாகவும் மழமழப்புடனும் வைத்துக்கொள்ளுகிறது.

**2 அளவுகளில் கிடைக்கிறது**




பெரிய சைஸ்
25 கிராம்




சிறிய
சைஸ்
5 கிராம்

**குடிகூரா ஆயின்ட்மென்ட்**

சருமப் பராமரிப்பிற்கு உலகிலேயே மிகப் பிரசித்தமான பெயர்

NAS-6976

கோவையில்

# 3500 ரூ. மதிப்புள்ள 50 பொருள்கள் பரிசுகளாக

1-9-66 முதல் 15-11-66 முடிய எமது கடையில் ரூ. 25/-க்கு ஜவுளி வாங்குபவர்களுக்கு இலவசப் பரிசுக் கூப்பன் அளிக்கப்படும். ஒவ்வொரு ரூ. 25/-க்கும் ஒவ்வொரு கூப்பன் தரப்படும்.




பண்டிகை நாட்களை முன்னிட்டு காஞ்சிபுரம், பனாரஸ், தர்மாவரம் ஆரணி, கத்வால், மணிபுரி, பட்டுப் புடவைகளும், பற்பல மில், நூல் ஜவுளிகளும் புதிய ரகங்கள் ஏராளமாக வந்துள்ளன. வெளியூர் ஆர்டர்களை உடனுக்குடன் கவனித்து பார்சல் அனுப்புவதுடன் பரிசுக் கூப்பன்களும் அனுப்பி வைக்கப்படும்.

போன்: 4896-4896A

# மதராஸ் சில்க் ஸ்டோர்ஸ்

ராம்நகர், கோயமுத்தூர்-9

ESTD. 1956

OSR

கண்டுபிடித்த மலர்த் தோட்டத்திலிருந்து மனம் கொண்ட மட்டும் மலர்களைப் பறித்துத் தன் மடியில் கட்டிக் கொண்டாள்.

''அன்னிக்கு அத்தைகிட்டே விசாரிச்சேன். அஞ்சாறு வருஷத்துக்கு முன்னாலே இந்தப் பக்கத்திலே ஒரு சாமியார் இருந்தாராம். அவர்தான் இந்தப் பூந்தோட்டத்தை இங்கே உண்டாக்கியிருக்கணும்னு அத்தை சொல்லிச்சு'' என்றாள் வள்ளி.

''சாமியார் எந்தத் தெய்வத்தைப் பூசை செய்யறதுக்காக இதெல்லாம் வச்சாரோ! அந்தப் பூவெல்லாம் இப்ப கௌரியம்மன் பூசைக்காக நீ பறிச்சுக்கிட்டுப் போறே.''

''கௌரியம்மன் வேறே, மத்த தெய்வம் வேறயா? எல்லாம் ஒண்ணுதானே.... இன்னும் பார்க்கப் போனால் சாமியார் பூசை செய்ததும் கௌரியம்மனைத்தானோ என்னமோ? யார் கண்டது ?''

பேசிக் கொண்டே இருவரும் உடும்புக் கொட்டகையருகே வந்தபோது காளியண்ணன் அத்திமர மேட்டில் உட்கார்ந்து சாவகாசமாகப் பீடி குடித்துக் கொண்டிருந்தான்.

''எங்கே வந்தீங்க ரெண்டு பேரும்?''

'' இன்னிக்கு வெள்ளிக்கிழமையாச்சே அண்ணே... மறந்திட்டியா?''

''கன்னிமலைக்குத்தானே போகணும். காலை வீசிப் போட்டு நடந்து போங்க.''

''ஐயையோ, நடந்தா?''

''வேலையாப் போறவங்களைத்தான் டிராலியிலே ஏத்தலாமாம். மத்தவங்களை ஏத்தறதுக்குப் புது ஐயா உத்தரவு தேவையாம்.''

''அப்படி அந்த ஐயா உத்தரவு போட்டிருக்கிறாரா, என்ன?'' என்று கேட்டாள் வள்ளி.

''ஆமாம். கண்ட கண்டவங்களையெல்லாம் நான் டிராலியிலே ஏத்திடறேனும்.''

'' பொல்லாதவரா யிருப்பார் போலேயிருக்கு அந்தப் புது ஐயா'' என்றாள் மங்கா.

''எல்லாம் நீ வெதைச்ச வெனைதான். அன்னிக்கு ஆட்டம் காட்டினே பாரு. அதுக்கப்புறம்தான் ஒண்ணு மாத்தி யொண்ணு என் தலைக்கு வந்துக்கிட்டிருக்கு'' என்றான் காளியண்ணன் வெறுப்புடன்.

''அதெல்லாம் என் தலை மேலே ஏன் வெக்கறே? நீ ஒழுங்கு தவறி நடந்திருப்பே! ஒழுங்கை நிலைநாட்டறதுக்காக அவங்க உத்தரவு போட்டிருப்பாங்க. சர்க்கார் உத்தியோகமா சும்மாவா?'' என்றாள் மங்கா.

ஆத்திர மிகுதியில் பல்லைக் கடித்தான் காளியண்ணன்.

''வள்ளி, கன்னிமலைக்குப் போறதாயிருந்தால் காலா காலத்திலே போயிடு. இந்த மங்கா இங்கே நின்னு தாறுமாறுப் பேசிக்கிட்டிருந்தா எனக்குக் கோவம் தாங்காது'' என்றான்.

''உள்ளதைச் சொன்னா உடம்பெரியுது. வேறென்ன?'' என்றாள் மங்கா, ஏளனப் புன்னகையுடன் எங்கோ பார்த்தவாறு.

''இப்பவே நேரமாயிடுச்சு மங்கா. நடந்து போய்த் திரும்பறதுக்குள்ளே உச்சிப் பொழுது தாண்டிப் போயிடும். சீக்கிரம் புறப்படு'' என்று துரிதப்படுத்தினாள் வள்ளி.

''இப்பவே கால் ரெண்டும் கெஞ்சுது'' என்று கூறிய மங்கா சட்டென்று சமாளித்துக் கொண்டு, ''ஆமாம், என்ன பிரமாதம்... இந்தக் குறுக்கு வழியே நமக்கு வேண்டாம். நேர் வழியாகப் போய் நேர் வழியாத் திரும்பி வருவோம். அதுதான் தம்மாசாயிருக்கும்'' என்று குதூகலக் குரலில் கூறியவாறு துள்ளிக் குதித்துக் கொண்டே வள்ளியைத் தொடர்ந்து அங்கிருந்து நடந்தாள்.

''பைத்தியம், பைத்தியம்!'' என்று தலையிலடித்துக் கொண்டான் காளியண்ணன். அதே சமயம் அவன் கண்கள் மங்கா சென்ற திசையையே பார்த்துக் கொண்டிருந்தன. அவள் கண்ணுக்கு மறையும் வரை பார்த்துக் கொண்டேயிருந்தான்.

அருவிக் கரையை அடுத்த ஒரு திடலிலிருந்து மலைச் சரிவு வழியே ஓர் ஒற்றையடிப் பாதை வேலன்கடவு வரை செல்வதற்கு உதவும் குறுக்குப் பாதையாக அமைந்திருந்தது. அஞ்சலை அத்தை, ராவுத்தர் கடையிலிருந்து சாமான்கள் வாங்கி வர அந்தப் பாதை வழியாகத்தான் செல்வது வழக்கம் என்று வள்ளிக்குத் தெரியும். வேலன் கடவு வரை அந்தப் பாதை வழியே போவதில் நாலு கல் தூரத்தை மிச்சப்படுத்த முடியும். வேலன்கடவு போய்ச் சேர்ந்து விட்டால் அங்கிருந்து கன்னிமலை அதிக தூரத்தில் இல்லை. மோட்டார்ப் பாதை வழியே அரைக்கல் நடந்தால் அதற்கப்புறம் கன்னிமலைப் பிரதேசம்தான்.

மலைச் சரிவில் அந்தக் குறுகலான ஒற்றையடிப் பாதை வழியே பேசிக் கொண்டே நடக்க ஆரம்பித்தனர் வள்ளியும் மங்காவும்.

''உங்கண்ணன் புது ஐயான்னு சொல்லிச்சே, அந்த ஐயா ரொம்பக்

கண்டிப்புக்காரர் போலிருக்கு'' என்றான் மங்கா.

''பெரிய உத்தியோகத்திலே இருக்கிறவங்க கண்டிப்பாயில்லாட்டி முடியுமா ?'' என்றாள் வள்ளி.

''என்ன இருந்தாலும் வள்ளியக்கா, அந்த டிராலி வண்டியிலே இறங்கிப் போறது எவ்வளவு தம்மாசா இருந்திச்சு. அதிலே மண் விழுந்திச்சே, இப்போ'' என்று அலுத்துக் கொண்டாள் மங்கா.

சட்டென்று ஏதோ புதிதாகக் கண்டு பிடித்தவள் போல் கூறினாள். ''இல்லே வள்ளியக்கா, அந்த ஐயா ஒண்ணும் சொல்லியிருக்க மாட்டாரு. எல்லாம் உங்கண்ணன் கட்டி விடற கதை. நம்மை டிராலியிலே ஏத்தி அனுப்பறதிலே அதுக்கு இஷ்டமில்லே, அவ்வளவு தான் சமாசாரம்.''

வள்ளி சிரித்தாள். ''இத்தனை நாளும் இஷ்டமில்லாமத்தான் ஏத்தியனுப்பிச்சுக்கிட்டிருந்ததா?''

''இத்தனை நாளைக் கதை வேறே, இப்பத்திக் கதை வேறே. உங்கண்ணனுக்கு எம்மேலே பொல்லாத கோவம். அதுதான் சமாசாரம். தெரிஞ்சுக்க'' என்றாள் மங்கா தீர்மானமாக.

''மங்கா...., மங்கா.... உன்னைப் போலே வெகுளிப் பெண்ணை எங்கேயுமே பார்க்க முடியாது'' என்று சிரித்தாள் வள்ளி.

வழியில் பாறைகளுக்கிடையே சிலுசிலு வென்று ஓடிக் கொண்டிருந்தது பளிங்கு போன்ற மலைத் தண்ணீர்.

'' அக்கா, தண்ணீர்த் தாகமாயிருக்கு. கொஞ்சம் தண்ணியாச்சும் குடிச்சுடறேன்'' என்று அந்த ஓடையில் தண்ணீரை இரு கைகளினும் அள்ளி அள்ளிப் பருகினாள் மங்கா.

''அப்பா, இப்பத்தான் கொஞ்சத்துக்குக் கொஞ்சம் பசி அடங்கினாப் பலே இருக்கு'' என்று திருப்தியுடன் கூறிக் கொண்டே பாறைகளில் தாவிக் குதித்து வள்ளியிடம் வந்து நின்றாள்.

''மங்கா! எனக்கு ஒரு யோசனை தோணுது'' என்றாள் வள்ளி.

''என்ன?''

''அந்த ஐயாவையே நேரிலே கேட்டா என்ன?''

''எதைப் பத்தி?''

''அடுத்த வெள்ளிக்காவது நாம ரெண்டு பேரும் டிராலியிலேயே கன்னி மலைக்குப் போறதைப் பத்தித்தான்.''

''சரிதான். உனக்கும் காலு ரெண்டும் கொஞ்ச ஆரம்பிச்சுடுச்சல்லே ?'' என்று சிரித்தாள் மங்கா.

''நான் எப்படியாவது சமாளிச்சுக்குவேன். உன்னோட தவிப்பைப்



''இங்கே லாட்ஜிங்லே 'பெர்த்' கணக்கு. மேல் 'பெர்த்'தான் காலி. ஜன்னல் அருகே இருக்கு. 'ஜம்'னு காற்று வரும். மாதம் ஐம்பது ரூபாய் வாடகை!''

■ ■ ■

பார்த்தாத்தான் எனக்குக் கஷ்டமாயிருக்கு!'' என்றாள் வள்ளி.

''பலே, அக்கா... நீ சமயத்துக்குத் தகுந்தாப்பலே பேசித் தப்பிச்சுக்கிடறேயே?'' என்று அவள் தோளில் இடித்த மங்கா சற்றுப் பொறுத்துக் கூறினாள்: ''அதிருக்கட்டும், அக்கா! அந்த ஐயா யாரு, நீ யாரு? நேரிலேயே கேக்கப் போறேங்கிறியே? என்ன துணிச்சல் உனக்கு.''

''நல்ல காரியத்துக்குத்தானே கேக்கப் போறோம்? கௌரியம்மனை நினைச்சுக்கிட்டா துணிச்சல் தன்னைப் போல வந்திடறது!'' என்றாள் வள்ளி.

ஒற்றையடிப் பாதை இப்போது ஏறக்குறைய சம தரையான ஒரு பகுதியில் ஓர் அடர்ந்த தேக்கந்தோப்பு வழியே செல்ல ஆரம்பித்தது. ஏறி வரும் வெய்யிலுக்கு இதமாக அந்தத் தோப்பில் மட்டும் மெல்லிய மஞ்சுத் திரை படர்ந்திருந்தது. மஞ்சுத் திரைக்கு மேலே மரக் கிளைகளில் அமர்ந்திருந்த மைனாக்களும் சகுந்தப் பறவைகளும் கதிரவன் அளித்த போதையில் கானம் இசைத்துக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் கௌரியம்மன் கோயிலுக்குப் போய்க் கொண்டிருப்பவள் வள்ளி. ஆனால் இன்று ஏனோ அவள் மனத்தில் அசாதாரணமான பரவசம் நிரம்பியிருந்தது. புனித வேட்கை பொங்கித் ததும்பிக் கொண்டிருந்தது அவள் மனத்தில். அமைதி நிறைந்த அழகு அவளது நடையிலேயே மிளிர்ந்தது.

என்ன தோன்றியதோ மங்காவுக்கு, பக்கவாட்டில் விழிகளைத் திருப்பி, வள்ளியின் நடையழகை ரசித்தவாறே நடந்து கொண்டிருந்தாள். தொங்கத் தொங்க முடிந்து விட்டிருந்த கூந்தலில் செம்பருத்திப் பூவொன்றை அனுயாசமாகச் செருகியிருந்தாள் வள்ளி. பிறை போன்ற அவள் நெற்றியில் மஞ்சள் மினுமினுப்புக்கு நடுவே பளிச்சென்று துலங்கிய குங்குமத் திலகமும் துல்லியமான விபூதிக் கீற்றும் சௌமியமான அவள் முகத்துக்குத் தெய்வீகச் சோபையை அளித்திருந்தன.

சட்டென்று நின்றுவிட்டாள் மங்கா.

''என்ன மங்கா?''

''ஐயோ அக்கா! ஏன்தான் இப்படி அழகாயிருக்கியோ?'' என்று கூறியவாறு இரு கைகளும் அவள் முகத்தைச் சுற்றி வட்டமிட்டு விரல்களை நெட்டிப் பொட்டில் வைத்து நெரித்துக் கொண்டாள்.

வள்ளி சிரித்தாள்.

''ஆமாம், நீ பெரிய மனுஷி, திருஷ்டி கழிக்க வந்துட்டாயாக்கும் எனக்கு'' என்று சிரித்தவாறே மேலே நடந்தாள் வள்ளி.

''ஏங்கா.... ரொம்ப நாளா ஒண்ணு கேக்கணும்னு இருந்தேன். வாரா வாரம் கௌரியம்மன் கோயிலுக்குப் போறேயே, எதுக்கு?''

''கௌரியம்மனுக்குப் படையல் படைச்சிக் கும்பிடத்தான். வேறெதுக்கு?''

''அதுதான் எதுக்குன்னு கேட்டேன்?''

''கௌரியம்மனோட அருள் இருந்தாத்தானே நமக்கு நல்லது.''

''அதைக் கேக்கலே அக்கா, கௌரியம்மனைக் கும்பிடும் போது நீ என்ன நினைச்சுக்கிட்டுக் கும்பிடுவேன்னு தான் கேக்கறேன்.''

''என் வயசுப் பொண்ணு என்ன நினைச்சுக் கும்பிடுவாளோ அதையே தான் நானும் நினைச்சுக்குவேன்.''

''ஏன், நானும் உன் வயசுப் பொண்ணுதானே. நான் நினைக்கறதும் நீ நினைக்கிறதும் ஒண்ணாயிட முடியுமா?''

வள்ளி சிரித்தாள். ''நீ என்ன நினைச்சுக் கும்பிடறே? அதைத்தான் சொல்லேன்'' என்றாள்.

''எங்க வள்ளியக்காவுக்கு எப்போதும் நல்லதே நடக்கணும். அவ நினைக்கிறதெல்லாம் நிறைவேறணும். அவளோட தங்கமான குணத்துக்கேத்த தங்கமான மாப்பிள்ளை அவளுக்குக் கிடைக்கணும்....''

''போதும்.... போதும்.... நீயா வெகுளி.... பொல்லாத பொண்ணு!'' என்று அவள் முதுகில் செல்லமாக அடித்தாள் வள்ளி.

தெக்கந் தோப்பின் மறுகோடியிலிருந்து வேலன்கடவை நோக்கி மீண்டும் சரிவாக இறங்கிச் சென்றது ஒற்றையடிப் பாதை. அந்த உயரத்திலிருந்து வேலன்கடவு கூப்பிடு தூரத்தில் இருப்பது போல் தோன்றியது. நடக்க ஆரம்பித்தால் வேலன் கடவை அடைவதற்கு அரை மணி நேரமாவது ஆகுமென்று வள்ளிக்குத் தெரியும். ஆனால் மங்காவின் மனத்தில் நிராசையை நிரப்ப அவள் விரும்பவில்லை.

''அக்கா, அதோ தெரியுதே, வேலன் கடவுதானே? இனிமே கவலையில்லே. ஒரே மூச்சிலே கன்னிமலையை எட்டிப் பிடிச்சிடலாம்!'' என்று மங்கா உற்சாகத்துடன் கூறிய போது அவள் பதிலேதும் பேசாமல் நடந்தாள்.

அன்று வேலன்கடவில் வருடாந்திரச் சந்தை நடந்து கொண்டிருந்தது. சுற்று வட்டாரத்திலிருந்த சிறிய சிறிய குடியிருப்புகளிலிருந்தெல்லாம் ஜனங்கள் அன்று அங்கே வந்து கூடியிருந்தார்கள். சாதாரணமாகத் தூங்கி வழிந்து கொண்டிருக்கும் வேலன்கடவு அன்று அளவுக்கு மிஞ்சிய ஜனநடமாட்டத்தால் கலகலப்பு நிறைந்திருந்தது. அந்த ஜனக் கூட்டத்தைப் பார்த்து மங்காவுக்கு உற்சாகம் தாங்கவில்லை.

''ஐயோ வள்ளியக்கா! இன்னிக்கு இங்கேயே இருந்திடணும் போலிருக்கே. கோவிலுக்குக் கட்டாயம் போய்த்தான் ஆகணுமா?'' என்று கேட்டுவிட்டாள்.

''கோயிலுக்கு வந்திருக்கயா, — வேடிக்கை பார்க்க வந்திருக்கயா? நட சீக்கிரம்!'' என்று வள்ளி அவளை அதட்டியதும் மங்கா மறுபேச்சில்லாமல் அவளுடன் நடந்தாள்.

சற்று நேரத்தில் மரங்கள் சூழ்ந்த சமதரையுள்ள மேட்டுப் பகுதியும் அதன் நடுவே சின்னஞ்சிறிய கௌரியம்மன் கோயிலும், குளமும் காட்சியளித்தன.

கௌரியம்மன் கோயில் பூசாரி காத்துக் காத்து அலுத்துப் போய்க் குளக்கரை மண்டபத் தூணில் சாய்ந்தாற் போல் உட்கார்ந்து கிறங்கிக் கொண்டிருந்தார்.

''ஐயா, ஐயா!'' என்று வள்ளி அவரருகே சென்று குரல் கொடுத்ததும் அவர் திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்த்தார்.

''வந்திட்டயா வள்ளி? நேரமாயிடுச்சே, இன்னிக்கு வரமாட்டேயோன்னு நினைச்சேன்'' என்று கூறியவாறு எழுந்தார்.

''எவ்வளவு நேரமானாலும் இங்கு வராமே இருப்பேனா? இன்னிக்கு நடந்து வரும்படி ஆயிடுச்சு'' என்றாள் வள்ளி.

''அப்படிச் சொல்லு! நல்ல வேளை. கோயிலைப் பூட்டிக்கிட்டு வீட்டுக்குப் போறதுக்கிருந்தேன். நடுவிலே உறக்கம் வந்து காப்பாத்திடுச்சு'' என்று கூறிய பூசாரி குளத்திலிறங்கிக் கைகால் களைக் கழுவிக் கண்களைத் துடைத்துக் கொண்டு கோயிலுக்குள்ளே சென்றார்.

குளக்கரை மண்டபத்திலேயே நடுவில் படையல் பொங்குவதற்கான மண் அடுப்பு இருந்தது. அதற்கு வேண்டிய மண் பானை, அரிசி, பருப்பு முதலான சாமான்களையும் வழக்கம் போல் ஒரு பையில் போட்டுக் கொண்டு வந்திருந்தாள் வள்ளி. வழி நெடுக மங்கா சுள்ளிகளை ஒடித்துச் சேகரம் செய்து கொண்டு வந்திருந்தாள். அடுப்பை மூட்டி உலையேற்றி வைத்து விட்டு வள்ளி மலர்களை மாலையாகக் கட்ட உட்கார்ந்தாள்.

மாலை கட்டி முடிவதற்கும், பாத்திரத்தில் படையல் சோறு பதமாகி நிறைவதற்கும் சரியாயிருந்தது.சொல்லி வைத்தாற்போல் பூசாரியும் வந்து நின்றார், படையல் சோற்றை அம்மனுக்குப் படைத்துச் செல்வதற்கு.

''பூசாரி ஐயா, இந்த மாலையை அம்மனுக்குச் சாத்திடுங்க'' என்றாள் வள்ளி.

''பேஷ்.... பேஷ்.... உன் மனசு போலவே உன் கழுத்திலேயும் மாலை வந்து விழணும்'' என்று வாழ்த்திய வாறு பூசாரி மாலையை எடுத்துக் கொண்டு அம்மன் சந்நிதிக்குச் சென்றார். வள்ளியும் மங்காவும் அவரைத் தொடர்ந்து சென்றனர்.

கௌரியம்மன் விக்கிரகம் சிறியது தான். ஆனால் அழகும் அருளுமே உருவாகக் காட்சியளித்தது. எந்தச் சிற்பி அவ்வளவு தன்மயமாக அதைச் சமைத்திருந்தாரோ! பூசாரி மாலையைச் சாத்தியதும் பன்மடங்கு எழிலுடன் பிரகாசித்தாள் கௌரியம்மன். வள்ளியின் பரவசம் எல்லை மீறியது. உணர்ச்சிப் பெருக்கால் அவள் கண்களில் நீர் மல்கியது. என்னென்ன எண்ணங்கள் அவள் மனத்தில் பொங்கி நின்றனவோ !

தீபச்சுடரொளியில் அவள் கண்களில் பளபளத்த கண்ணீரைக் கண்டு மங்காவுக்கும் அழுகை வந்து விடும் போலிருந்தது. கஷ்டப்பட்டு அதை அடக்கிக் கொண்டாள்.

வள்ளிக்குப் பிரார்த்தனை எதுவும் தெரியாது. எட்டாவது வரை படித்திருந்தாளே யொழியத் துதிப்பாடல் எதுவும் அவளுக்குப் பாடமாகவில்லை. மௌனமான பிரார்த்தனைக்கே அவள் பழக்கப்பட்டிருந்ததால், ''கௌரித் தாயே! கௌரித் தாயே!'' என்ற ஜபம் மட்டும்தான் அவள் நெஞ்சில் அப்போது நிறைந்திருந்தது.

பூசாரி கௌரியம்மனுக்குத் தீபாராதனை செய்து இருவருக்கும் குங்குமப்பிரசாதம் வழங்கினார். பிரசாதத்தை இட்டுக் கொண்டபின் இருவரும் சந்நிதியில் விழுந்து கும்பிட்டுவிட்டு வெளியே வந்த போது அவர்கள் எதிரே கோயிலை நோக்கி மூவர் வந்து கொண்டிருந்தனர். இருவர் ஆடவர், ஒரு பெண். அந்த இருவரில் ஒருவர் எஞ்சினீயர் .குமரன் என்பதைக் கண்டதும் வள்ளி, கோயில் வாயிற்படியிலேயே தயங்கி நின்றாள். குமரனும் அவளை அந்நிலையில் பார்த்து வியப்பு ததும்பும் விழிகளுடன் அருகே வந்து சற்றுத் தயங்கினான்.

''வணக்கம் சார்!'' என்றாள் வள்ளி இயல்பான மரியாதையுடன்.

''வள்ளி, நீ நடந்து வரக் காரணமாயிருந்ததுக்கு என்னை மன்னிச்சுடு. போகும் போது நடந்து போகவேண்டாம். நாங்கள் தரிசனம் செய்து கொண்டு வரும் வரையில் பொறுத்திருந்து டிராலியிலேயே உச்சிக் கடவுக்குப் போயிடலாம்'' என்றான் குமரன்.

அவன் குரலில் இருந்த கனிவு வள்ளிக்குத் தேனாயிருந்தது.

''சரி சார்!'' என்று அவள் இனம் புரியாத பூரிப்புடன் குளக்கரை மண்டபத்தை நோக்கி நடந்தாள். (தொடரும்)

## ■ □ ■ □ ■ □ ■ □ முதலைப் பறவை ■ □ ■ □ ■ □ ■ □



முதலைப் பறவை Crocodile Bird என்று ஒரு பறவை இருக்கிறது. முதலைக்கு உற்றதொரு நண்பனாக விந்தைப் பணி புரிகிறது இந்தப் பறவை! நீர்வாழ் முதலைகள் தமது திறந்த வாயுடன் கரையோரங்களில் ஓய்வு எடுக்கும் போது இப்பறவைகள் முதலைகளின் பற்களில் உள்ள அழுக்குகள், கிருமிகள் இவற்றை உண்டு அம் முதலைகளின் ஆரோக்கியத்துக்கு அடிகோலுகின்றன. முதலைகளுக்கு ஆபத்து நெருங்குங்கால் அபாயக் குரல் எழுப்பி அவற்றை எச்சரித்தும் இவ்விந்தை நண்பன் பணிபுரிகிறது. -ஆர்.எஸ்.ஆர்.

# பயணம் முடிவதில்லை!

எம். பெருமாள்

வெள்ளி விழா சிறுகதைப் போட்டியில் மூன்றாவது பரிசு பெற்ற கதை 5

சில்லென்ற மழைத் துளிகள் ஊசி முனையாய்க் குத்தத் தொடங்கிவிட்ட சமயம், உடல் வலுவை யெல்லாம் ஒன்று திரட்டி நரம்பெல்லாம் முறுக்கேறித் தெறித்து நிற்கத் துடுப்புக் கோலைத் தண்ணீரின் அடி ஆழத்தில் ஊன்றிப் படகை முன்னுக்குத் தள்ளி விரைந்து கொண்டிருந்தான் முத்தையன். முகத்திலே விசிறித் தெறிக்கும் மழை நீரை ஒதுக்க முயன்று தோற்றுப் போன வெறுப்புடன், படகு நிறைய விறகுக்கட்டைகளைச் சுமந்தபடி மழையைக் கிழித்துக் கொண்டு இன்னும் இரண்டு மைல் அவன் போயாக வேண்டுமே!

சென்னை நகரத்தின் அழுகிப்போன குடலாய் நெளிந்து கிடக்கும் பக்கிங்காம் கால்வாய், மழை நேரத்தில் முன்னைவிட அதிகமாக நாறத் தொடங்கியது.

சென்டிரல் ரயில் நிலையத்தினருகே, பாலத்தின் மேல் பரபரப்பாக நடந்து



போவோருக்கு மழையின் கொடுமையைத் தாங்கும் தெம்பிருந்தாலும், அந்நேரத்தில் வாய்க்காலின் நாற்றத்தைச் சகித்துக் கொள்ளும் பொறுமை இல்லை. கையில் கிடைத்ததைக் கொண்டு 'கப்'பென்று மூக்கைப் பொத்தியபடி வெகு வேகமாகப் பாலத்தைக் கடக்கும் பட்டணத்து மனிதர்களைக் காணும் போது முத்தையனின் மனம் வேதனையில் துவண்டது.

இருள் கவிந்து தெரு விளக்குகள் கண் சிமிட்டும் நேரம். படகின் மையத்தில் தென்னோலை வேய்ந்த குடிசையினுள்ளிருந்து ஹரிக்கேன் விளக்கை ஏற்றி, காற்றில் அது அசைந்தாடி,






# லைப்பாய்

## இருக்குமிடம்: அதுவே...
## ஆரோக்கியம் இருக்குமிடம்

லைப்பாய் ஸ்நானம் . உற்சாகப் பெருக்கு . உல்லாச ஊற்று..
ஒவ்வொரு குளியலும் உணர்த்தும் : நல்ல சோப்புக்குரிய நன்மைகள்
யாவும் பெறலாம், அதற்கு மேலும் பெறலாம் ஆரோக்கியமுடன்.

**அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய்**

32-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

அங்கோதி உடைந்து விடாமல் இருக்க, உள்ளே தள்ளி மாட்டிய ரங்கண்ணன், கித்தான்களை அவசரம் அவசரமாக எடுத்து உதறி விறகுக் கட்டைகளின் மேல் படர்த்திய பின்னர் எஞ்சியிருந்ததைத் தனக்கும், முத்தையனுக்குமாகப் போர்த்திக் கொண்டான்.

மூன்றாண்டுகளுக்கு முன்னர் ஒரு நாள் இதே மாதிரி சூழ்நிலையில் மழையின் ஆதிக்க ஆவேசத்துக்கு ஈடு கொடுக்க முடியாமல், போராடிக் கொண்டிருந்தவன் ரங்கண்ணன். வறுமையில் உடல் வாடிக் கிடந்த போதிலும் தன் வலுவை இழந்து விடாமல் வைரம் பாய்ந்திருந்ததால், வலுவிலே சென்று அவனுக்கு உதவியவன் இதே முத்தையன்தான்.

ரங்கண்ணன் அந்த நன்றியின் அறிகுறியாகத்தானே கண்டிராக்டர் நாச்சிமுத்துவிடம் சொல்லி முத்தையனுக்கு வேலை வாங்கிக் கொடுத்திருந்தான்!

வாய்க்காலின் ஓட்டத்தில் போராடி, முன்னேறிப் போக முடிந்த அவர்களால், வாழ்வின் நீரோட்டத்தில் எதிர் நீச்சலடிக்க முடியாமல் போய் விட்டது.

ஹாமில்டன் வாராவதியையடுத்த குப்பத்தின் குடியிருப்புகளைத் தாண்டி விரைந்து கொண்டிருந்தது கூலியாட்களின் கும்பல். வாழ்க்கையையே தாற்காலிக சந்தோஷங்களில் வடித்துத் தீர்த்துவிடுவது எனத் தாமாக வகுத்துக் கொண்ட வாழ்வு நெறியுடன்— அதையன்றி வேறு திட்டங்களுக்கோ திடமான தீர்மானங்களுக்கோ எத்தகைய வழிமுறையும் இல்லையென்ற தீர்க்கமான முடிவுடன் கூலிப்பட்டாளம் ஓடிக்கொண்டிருந்தது.

நகர மக்கள் ஒதுக்கித் தள்ளிய கழிவுக் குட்டையில் வெய்யிலிலும், மழையிலும் நெஞ்சைக் கண்டி யிழுக்கும் வேதனையுடன் போராடி, ஒரு வாரத்துக் கூலியை மொத்தமாகக் கையில் பெற்றவுடன், வாரந்தோறும் தோன்றும் மகிழ்வின் வெறித் துள்ளலோடு 'சரக்கு' கிடைக்குமிடத்தை நோக்கி வழக்கம்போல் ஓடினார்கள் அவர்கள். இவர்களுக்கு மட்டுமே தெரியக் கூடிய இடத்தில் ரகசியமாகச் சரக்கு விற்றுக் கொண்டிருக்கும் ரத்தினசாமிக்குச் சனிக்கிழமை கொண்டாட்டம்தான். குடியின் போதை உச்சத்தை அடையும் தருணத்தில் அன்றைய இரவின் மிச்சத்தைக் கவனித்துக் கொள்ள எல்லம்மாள் கிழவியின் தயவு இருக்கிறதே.

மந்தையாகத் திரளாக வந்தவர்களின் மத்தியிலே மனிதனாகத் தனித்து நின்றிடும் முத்தையன் மட்டும் எல்லம்மாவின் இதய பூர்வமான அன்புக்குப் பாத்திரமானவன். தன் பணியைச் செவ்வனே முடித்து விட்டு, பணத்தை இடுப்பில் முடிந்து கொண்டே வந்த எல்லம்மா வழக்கத்துக்கு விரோதமாக முத்தையனின் கையிலும் பாட்டில் இருப்பதைக் கண்டு வியந்தாள்.

''பளையபடியும் ஆரம்பிச்சிட்டியா?'' என்று நீட்டி முழக்கிய அவளைச் சட்டென்று தடுத்தான் முத்தையன்.

''ஆயா... தப்பா நெனைக்காதே... நெஞ்சு எரியுதேன்னு வெறும் சோடாதான்'' என்றான்.

அவன் மனத்துக்குப் பிடிக்கிறதோ, இல்லையோ — ஆனாலும் நண்பர்களை விரோதித்துக்கொள்ள வேண்டாமென்ற ஒரே காரணத்துக்காக வாரந்தோறும் அவர்களுடன் வருவான். குடி வெறியும், வாலிபத் திமிரும் அடங்கி ஒவ்வொருவரும் தானாகத் திரும்பும் வரையில் மனத்தை அடக்கிக் காத்திருப்பான். ஒவ்வொரு சமயங்களில் எல்லம்மாவின் பேச்சு அவனுக்குத் துணையிருக்கும்.

''பொவயிலே வச்சிக்கிறியா?'' எனக் கேட்டவள் சுருக்குப் பையை இடுப்பிலிருந்து வெடுக்கென இழுத்து இரண்டு வெற்றிலைச் சருகை வாயில் திணித்துக் கொண்டாள்.



''வாங்கியாரலே ஆயா, தா போயி வாங்கிக்னு வர்றேன்'' எனப் புறப்பட்டவனைத் தடுத்துத் தானே போவதாகச் சொன்னாள்.

''எதுனாச்சியும் ஆண்ணியா?'' என்று தாய்மைப் பரிவோடு கேட்ட அவளின் உருவத்தில் அசாத்திய நம்பிக்கையை மனத்துள் நியாய் வளர்த்து, பல மைல்களுக்கு அப்பால் வாழ்ந்து கொண்டிருக்கும் தாயைக் கண்டான் முத்தையன்.

கேட்டதற்குப் பதில் சொல்லவில்லையே எனக் காத்திராமல் போய்விட்ட எல்லம்மா திரும்பி வரும்போது இரண்டு பன்னும்

பொறையும், கையில் சுயச் செம்பில் சூடான பானமும் வாங்கி வந்திருந்தாள்.

''ரெண்டு பன்னைத் துண்ணு. இத்தெக் குடிச்சுட்டுப் போய்த் தூங்கு. இந்தக் களை சடைங்க வந்து சேரும். தன்னுப்பியிலே போ.''

மழையில் நனைந்த அசதிக்கும் போராடிக் களைத்த மனத்துக்கும் இதமாக இருந்தது, அவள் கொணர்ந்த சுக்குக் கஷாயம். இரவின் பயங்கர அமைதியைக் குலைத்த வண்ணம், 'சட் சட்'டென்று மழைச் சரங்கள் மட்டும் விழுந்து தெறித்தன. எதிரேயிருப்பவரின் முகம் தெளிவாகத் தெரியாத மங்கிய இருட்டில் முட்டைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த முத்தையன், பீடியைப் பற்ற வைத்துச் சூட்டை உள்ளடக்கித் தேக்கி, சுகமான வெப்பக் கதகதப்பை அனுபவிக்கத் தொடங்கினான். மனத்துள் அலைமோதும் எண்ணங்கள். கால வெள்ளத்தில் கரைவுத் தேக்கமாய் நிலைத்துவிட்ட சிற்சில எண்ணங்களின் பயங்கர நிழல்கள்.

''உடம்பு கொஞ்சமாச்சும் தேவலியா, தொரை?'' என அரை மணி நேர அமைதிக்குப் பின் வினவினாள் எல்லம்மா. இந்த இடைவெளியில் ஒரு கோழித் தூக்கம் போட்டிருந்தது அவன் குரலின் விரிசலில் தெரியத்தான் செய்தது.

''தேவலேதான். அன்றுடம் 'இதே பொழைப்பாரு. உடம்பைப் பத்திக் கவலைப் படத் தோணுமா?'' பீடியை இழுத்த வேகத்தில் கனன்ற நெருப்பின் வெளிச்சத்தில் எலும்பும் தோலுமாய் ஒட்டிப் போன அவன் முகத்தில் படர்ந்த வேதனைகள், எல்லம்மாவின் இடுங்கிய கண்களுக்குத் தெரிந்தன.

''ஒரு நாளுதான் வேலைக்குப் போகாமல் இரேன். குடியா முழுகிப் பூடிச்சி?'' என்றாள் ஆதூரத்துடன்.

''ஆங்...என் குடி இனிமேத்தானா முழுகப் போவுது? இருக்கியா செத்தியான்னு கேட்கத்தான் ஆரு இருக்கா?'' என்று துயர சோகத்துடன் கூறினான் முத்தையன்.

''ஒங்க அம்மாதான் கீறுனே... இங்க இட்டாந்துர்றதுதானே?'' எனக் கேட்டாள்.

''ம்...அவுங்க வர்றதா இருந்தாத்தான் வருஷம் மூணு ஓடிப்பூட்டிருக்குமே...'' என அலுத்துக் கொண்டவன், தீர்மானமாக ''இனிமே அவுங்களே வர்றேன்னாக் கூட நான் இட்டாறப்போறதில்லே'' என்றான்.

மழை இரவின் அமைதி சில விநாடிகளுக்கு அங்கு , முழுமையாக ஆக்கிரமித்திருந்தது. மூன்று வருஷங்களுக்கு முன்னால் உதறி விட்டு வந்த பிறந்த மண்ணின் நினைவுகள் அவன் நெஞ்சில் உதற முடியாத துயரத்தை ஏற்றிக் கொண்டிருந்தன.

''ஆயா... ஒழைக்கிற எங்களுக்கு வயிறு ரொம்பறதில்லே. எங்க ஒழைப்பைக் கன்டிராக்ட் எடுக்கிறவனுக்கு ஓகோ ஓகோன்னு பணம் குவியுது.... ஆயா.... நெல்த்தை வுட்டுட்டு நான் மூணு வருஷத்துக்கு முன்னாலே ஓடிவந்ததுக்கும் இதுதான் காரணம். உழுவுறவன் வவுத்துலே உழுவு மண்ணுதான் விழும். வெளைஞ்ச நெல்லை லாரியிலே ஏத்திக்கினு போயி கன்ட்ராக்ட்டுலே விக்கிறவனுக்குக் கொள்ளையோ கொள்ளைன்னு பணம் கொழிக்குது'' என முத்தையன் சொன்னவுடன் எல்லம்மாவுக்குச் சூடு பிடித்துவிட்டது.

நிமிர்ந்து உட்கார்ந்தவள், ''ஆமாண்டா, நாச்சிமுத்து துட்டைப் போட்டுக் கன்ட்ராக்ட் எடுக்கிறான். வர்ற பணத்துலே லாபம் சேர்க்கறான். அவனா சம்பாதிக்கிறான்? அவன் பணம்தானே சம்பாதிக்குது? ஒங் கையிலே துட்டு இருந்துச்சினா நீயும் செய்யேன்'' என்றாள் ரோஷத்துடன்.

''என்னைப் போல் ஏழைங்களுக்கு ஏது ஆயா விடிவு காலம்?''

''முத்தையா, கையிலே ஒரு ரூவாதானே இருக்குதுன்னு வருத்தப்படறவன் ஏழையில்லப்பா... ஒம்பது ரூபா இல்லியேன்னு ஏங்கறான் பாரு... அவன்தான் உண்மையிலேயே ஏழை! ஏழை – பணக்காரன் வித்தியாசமெல்லாம் 'இல்லி'யேன்னு ஏங்குகிற ஏக்கத்திலேதான் கீது.''

''ஐயோ, நான் இல்லியேன்னு ஏங்கலே ஆயா. இருந்தது பறி போயிடுச்சேன்னுதான் வருத்தப்படறேன்'' என்று துயர் சுமந்த நெஞ்சுடன் அவன் கூறியபோது, ''இன்னாப்பா சொல்றே நீ?'' எனக் கேட்டாள் எல்லம்மா.

''எங்கம்மா அடிக்கடி சொல்லுவாங்க. 'ஏழையாயிருக்கிறது பாபமில்லேடா முத்து... ஏழைமை வேலியைத் தாண்ட முடியாமல், அதை மீறி வெளியேற முடியாமல் அதுக்குள்ளேயே முடங்கிப் போயிடற பலவீனந்தான், அந்தப் பரிதாபம்தான் – பாவம்'னு' எங்கம்மா சொல்றதை என்னிக்கும் நான் மறக்கலே ஆயா.''

தாயையும், தாய் தந்த நம்பிக்கை மொழிகளையும் மறவாமல் நெஞ்சிலே நிறைத்து வாழத் தெரிந்தவனை முத்தையன் இன்று தன் மனத்துள் குமுறிக் கிடக்கும் எண்ணங்களைக் கொட்டித் தீர்க்கும்போது அவற்றை ஏற்கும் கொள்கலமாய் அமைந்துவிட்டவள் எல்லம்மா. பதிலுக்குப் பதில் சவுக்கடி கொடுக்கும் துறுதுறுத்த நாக்கு அவளுக்கு இருந்ததால் விவாதம் சூடேறிப் போய்விட்டது.

''அம்மா மேலே அம்புட்டு ஆசை இருக்கிறவன் - இன்னைக்குக்கு அவுங்களைத் தனியா வுட்டுட்டு ஓடியாரணும்?''

''பசியும் பட்டினியும் தாள முடியாமல் தான், ஆயா. எங்க நயினா வச்சிட்டுப் போன கடனை அடைக்கத்தான் எங்க ஒழைப்பெல்லாம் சரியாயிருந்திச்சு. அப்படியும் அடைபடாத கடனைத் தீர்க்கறதுக்கு, இருந்த ஒண்ணு ரெண்டு சாமான் செட்டெல்லாம் வித்துத் தீர்த்தோம். எங்க பரம்பரை பரம்பரையா வந்த சொத்து அரைக்காணி நெலம்–'' சொல்லும்போதே முத்தையனின் குரல் அடைத்துக் கொண்டு வந்தது. விழிநீரைத் துடைத்துக் கொண்டே, ''மிஞ்சினது அரைக்காணி நெலந்தான். அதை வித்துடலே. அடமானம் எழுதிக் குடுத்தோம். அன்னிக்கு வுழுந்த அடி இன்னும் எழுந்திருக்கவே முடியலே. வருசா வருசம் வட்டி மட்டும் ஏறிக்கினே போவுது'' என்றான்.

எல்லம்மா, ''கடனை அடைக்க முடியாமலா நீ ஓடியாந்திட்டே?'' எனக் கேட்டாள்.

''ஆயா. நான் வயல்லே வேலை பார்த்தவன். சொந்த நெலத்துலே உழுது பயிர்

பண்ணலின எனக்கு, பண்ணைக்காரரு நெலத் துலே கால் வைச்சுப் பழகின எனக்கு, பந்தகம் வச்ச நெலத்து மேலே — அதுவும் பண்ணைக் கூலிக்காரனு காலே வைக்கவே புடிக்கலே. வித்துத் தொலைச்சுப்புட்டுப் பட்டணம் போவலாம்னு அம்மாளைக் கூப்பிட்டேன்.''

''அவ, வரமாட்டேனுட்டாளாக்கும்?''

''அவுங்க வராதது மட்டுமில்லே. எந்தம்பி இருவது வயசு எளங்காளைப் பய..! அவனையும் அனுப்ப மாட்டேனுட்டாங்க.... அந்த வயல்லியே கூலி வேலை செஞ்சாச்சும் கடனை அடைச்சு நம்ம நெலத்துலேதாண்டா பாடுபடணும். பட்டணத்துக்குப் போயி பொழைச்சுடலாம்னு போறவங்க கதி இன்னுன்னு தெரியுமா? போவக் கூடாதுன்னுட்டாங்க. ஆயா! நான் கேக்கலே. இன்னு ஆயா, நீயே சொல்லு. என் நெலத்துலே நான் உழுவேன். எனக்குப் புடிச்சதைப் பயிர் பண்ணுவேன். அத்தெ வுட்டுட்டு வயல்லே எறங்கி நான் உழுவுறதை, வரப்புலே நின்னுக்கினு பந்தகக்காரன் வேடிக்கை பார்க்கறதுன்னு....நெஞ்சு கொதிக்கலே?''

''ஆமா, அநியாயமாத்தான் நடந்திருக்குது....!''

''எங்கிட்டேர்ந்து, பக்கத்து நெலத்தை வெலைக்கு வாங்கின பாவி, வாய்க்காத் தண்ணி வர்ற பாதையைத் திருப்பிவுட்டுட்டான். கெணத்துலேர்ந்து கவலை போட்டு எந்தம்பி தண்ணி எறைப்பான். நான் நெலத்துலே நீர் பாய்ச்சுவேன். அதுக்கும் கூடக் குறுக்கே நின்னானுக பாவிங்க... 'சீ, நீங்களும் பாளாய்ப்போன இந்த மண்ணும்'னு ஒதறிப்புட்டு வரப்புல வந்து நின்னேன்!''

''ஹூம்.... சாது மெரண்டால் காடு கொள்ளுமா?''

''தா...நீயும் இந்த நெலமும்னு ஒதறிப்புட்டு வந்து நின்னேன். பளார் பளார்னு கன்னத்துலே அறைஞ்சுட்டாங்க அம்மா. ஏர் புடிச்சு உழுத கை அது! 'மண்ணைப் பத்தித் தாழ்வாப் பேசாதேடா, மானங்கெட்ட பயலே! ஒனக்கு ஒடம்பில்லே? ஒடம்பிலே ரத்தமில்லே? கடைசிச் சொட்டு ரத்தம் இருக்கிறவரை நிக்காமே, நிதானிச்சு நீதான் பாடுபடணும். காலமெல்லாம் சோறு போடப் போகிறது அந்த மாதா தான்'னு பளீர்பளீர்னு மூஞ்சிலே அறைஞ்சாங்க எங்கம்மா... அதுனுலே மனசு வெறுத்து அன்னிக்கு ஊரை விட்டு ஓடியாந்தவன்தான் ஆயா...''

வாழ்க்கையின் இன்ப துன்பங்களையெல்லாம் ஏர் முனையில் கட்டி வைத்துவிட்டு, நிலத்தையே பெரிதாக நம்பி ஏர் பிடித்து உழும் கிழட்டுத் தாய்! எதிர்காலத்தைப் பிரமாதமாக நம்பிக் கொண்டு இறந்த காலத்தையும், நிகழ்காலத்தையும் சூனியமாக்கிக் கொண்டு ஓடி வந்தவன் மகன்.

மூன்றாண்டுகளுக்கு முன்—

கிராமத்து மண்ணை உதறி வந்த இனத்தில், தன்னோடு ஒன்றாகப் பட்டணம் புறப்பட்டிருந்த கிராம நண்பர்கள் மூவரின் நிலைகளையும் பற்றிச் சற்றே சிந்தித்தான்.

கல்வி ஒன்றைத் தவிர, வேறெந்த மூலதனமுமின்றி வந்த வாஞ்சிநாதன், மாங்குளம்



''மில் முதலாளியின் இரும்பு பீரோவை உடைத்து அதிகமான நகைகளை மட்டும் எடுத்து, நகைகளே இல்லாத என் மனைவி; மக்களுக்கும் பகிர்ந்து, சோஷலிஸம் பண்ணினேன். கடைசியிலே, என்னைக் கம்பி எண்ண வச்சிட்டாங்க!''

கிராமத்து மணியக்காரரின் மகன், கார்ப்பரேஷன் ஆபீசில் குமாஸ்தாவாகச் சேர்ந்து பற்றாக்குறை என்னும் பாலிவரக்கனுக்குப் பலியாகிக் கொண்டிருக்கும் பரிதாபம்— அவன் பெற்ற கல்வியின் வெற்றி! தங்கக் கட்டுப்பாடு காரணமாக வேலை யிழந்த பொற்கொல்லரின் மகன் தங்கப்பன், பள்ளிப் படிப்பும், பகட்டான வாழ்வும் தேவையில்லையென்று இறுமாப்புடன் வாழ வைத்த குலத் தொழிலின் திடீர் நலிவுக்குப் பின்னர், எப்படியாவது வாழ்ந்தால் போதும் என்ற வறுமையின் கோரத்தால் கார் மெகானிசம் கற்க வந்து, மூன்றாண்டுகள் கடினத்துடன் உடலை ஓடாக்கிப் படித்து இப்போதுதான் நிமிர்ந்து நிற்கும் தெம்பைப் பெற்றிருக்கும் — உழைப்பின் வெற்றி!

'வேண்டுமென்ற அளவு' எனப் பிரமாதப்படாவிட்டாலும் ஓரளவுக்குத் தேவையான மூலதனத்துடன் சென்னைக்குத் துணிந்து புறப்பட்டு வந்த சங்கரலிங்கம், சிறிய அளவில் விறகுத் தொட்டி ஆரம்பித்து, பணத்தைக் கொண்டு பணம் பண்ணத் தெரிந்த பரம்பரையின் வித்தான தனக்கும் வாழத் தெரியும்—தன்னாலும் வாழ முடியும் என்று நிலைநாட்டி இன்று சென்னையம்பதியில் நாலு லக்கத்துக்குப் பணம் புரட்டும் கீர்த்தியும் செல்வாக்கும் பெற்ற விமரிசையான வாழ்வு — பணத்தின் வெற்றி!

ஒன்றாகப் புறப்பட்ட நால்வருள், பாரம்பரியக் கல்வியின் காரணமாக, எடுத்த எந்தக் காரியத்தையும் எளிதில் கிரகித்துக் கொள்ளும் தொழில் நுட்பம் ஒருவருக்கும், செல்வத்தின் செல்வாக்கு மற்றவருக்குமாகப் பலனளித்த வேளையில் — இவற்றின் எந்தத் தன்மையும் பெற்றிராமல், தந்தை விட்டுச் சென்ற கடனோடு, சத்திழந்து, சாரமற்றுப் போன நிலத்தோடு போராடும்

தாயையும், அவளின் நிழலாய் அடங்கிவிட்ட தம்பியையும் பெற்று, முரட்டுத்தனமாய் வளர்ந்ததன் உடல் வலுவே மூலதனம் எனப் பெரிதாக நம்பியிருக்கும் தன் நிலையை எண்ணிச் சிரிப்பு மேலிட்டது முத்தையனுக்கு!

சென்னைக்கு வந்தும் நெடுநாட்கள் பசி-பஞ்சம் பட்டினி எனப் பரிதவித்த பின்னர், ரங்கண்ணனின் தயவால் படகோட்டும் வேலை பெற்றான் முத்தையன். கார்ப்பரேஷன் அங்கீகாரம் பெற்ற நாச்சிமுத்துவின் கண்ட்ராக்டில், பக்கிங்காம் கால்வாயில் படகிலே விறகும், வைக்கோற் பிரிகளும் இன்னோரன்ன பாரங்களையும் ஏற்றி வரும் படகோட்டியாக – வெய்யில் மழை என்ற கால நிலைக் கணக்கின்றி, நாள் முழுதும் பணி புரிந்தால் இரண்டு ரூபாய் கூலி என்ற ஒப்பந்தத்தில் இணைந்து மூன்று வருடங்கள் ஓடி விட்டன. ஆனால் அவன் எதிர் நோக்கி இருந்த இலட்சியம் இன்னும் கைகூடவில்லை.

இந்த வேதனையுடனேயே ஒவ்வொரு நாளும் துடிப்பு வலிக்கும்போது முத்தையனின் துயரமும் வளர்ந்து கொண்டுதான் வந்தது. ஐந்நூறு ரூபாயை மொத்தமாகச் சேர்த்த பின் அவனும் கண்டிராக்ட் எடுத்து விட்டால்....? நாச்சிமுத்துவைப் போல் கொள்ளையோ கொள்ளையெனச் சம்பாதிக்கலாம். ஆனால் அவன் சம்பாத்தியமெல்லாம் இரண்டாண்டுகளுக்கு முன்வரை மற்றவர்களைப்போலவே கரைந்து விரயமாகிக் கொண்டிருந்தது. இப்போதுதானே முத்தையன் தன்னை உணர்ந்து திருத்திக் கொண்டிருக்கிறான்?

''பந்தமாக எழுதிக் கொடுத்த நெலத்துலியே கூலிக்குப் பாடுபட்டுக் கொஞ்சம், கொஞ்சமாக் கடனை அடச்சிட்டு 'இன்னுங் கொஞ்சம் கடன்தான்டா பாக்கியிருக்குது மகனே'ன்னு முத்தையனுக்கு அவன் தாயார் கடுதாசி எழுதினள் 'சீ! பொம்பளை... நெலத்துலே வச்சிருக்கிற நம்பிக்கை நமக்கு இல்லாமப் பூடிச்சேன்னு' அவன் துடித்தான். இனி என் சம்பாத்தியத்தை வீணாக்கிறதில்லேன்னு திட்டம் பண்ணிக் கொண்டான். ஆறே மாசத்துலே அந்தப் பாக்கியை நானே அடைச்சுப்புடறேன்'னு சவால் விட்டுக் கொண்டு உழைக்க ஆரம்பித்தான்.''

ஆனால் ஏழைங்களைத்தான் ஆண்டவன் அதிகமாகச் சோதிக்கிறான்.

இரண்டு வருஷங்கள் சேர்ந்தாற்போல் மழை இல்லாமல் போய்–மானம் பார்த்த பூமியிலே அவன் தாயார் வயலை நம்பித் தவிச்ச அந்தத் தவிப்பு அவன் உள்ளத்தில் சுரீரென்று சூடு போட்டது. அன்றைக்கு நெஞ்சிலே விழுந்த அடி, ''நெலத்தை நம்பிக்கிட்டு அது வறண்டு போய்ப் பாளம் பாளமா வெடிச்சுக் கிடந்தாலும் நெலத்துல இல்லாத ஈரத்தை நெஞ்சிலே ஏத்துக்கினு, தைரியமா கிராமத்தை விட்டு நகரவே மாட்டேன்னு நெலைச்சு நிக்கிறாங்களே...பஞ்சம் வந்ததுனலை ஏறிப் போன புதுக் கடனோட, பாழாய்ப் போன பழைய கடன் நானூறு ரூபாயையும் அடைக்கிற வரைக்கும் நான் குடிக்கிறதில்லே, கும்மாளம் போடறதில்லே'' என்று சத்தியம் பண்ணிக் கொண்டான்.

வைராக்கிய நிலையில் நின்று அந்தச் சத்தியத்தைக் காப்பாற்றிக் கொண்டு வந்தான் முத்தையன். குடிக்கிறதில்லே, கும்மாளம் போடுவதில்லே. தன் கையில் பணம் சேர்ந்து கொண்டு வருவதை எண்ணியபோதெல்லாம் அவனுக்கு எத்தனை குதூகலம், எடுத்த காரியத்தை வெற்றிகரமாக முடித்து விட்ட இலட்சியத்தின் வெற்றி! பட்ட கடனை அடைத்துவிடப் போகும் பேரானந்தம்! அதைத் தன் அந்தரங்கத்துக்கு உகந்த எல்லம்மாவிடம் கூறினன்.

''துட்டு சேர்த்துட்டே?'' என அதிசயித்தாள் ஏழை.

''ஆமா. மூனு வருஷமா கஷ்டப்பட்டுக் கிடைச்ச கூலியிலே மிச்சம் பண்ணி ஐந்நூறு ரூபா சேர்த்திருக்கேன் ஆயா... எங்கூட வேலை பாக்குற பயலுகளெல்லாம் குடிச்சும் கொண்டாடியும் அப்பப்ப பணத்தைத் தொலைச்சுட்டானுங்க. நான் மனசைக் கட்டுப்படுத்திக்கினு மொத்தமா அஞ்சு நூறு சேத்துப்புட்டேன்.''

''ஊருக்குப் போறியா? கடுதாசி எழுதிக் கிறியா?'' என வாஞ்சையுடன் விசாரித்தாள் தாய்க்குத் தாயாகப் பழகிய எல்லம்மா.

''இல்லே ஆயா... கைநிறையப் பணத்தோட திடும்னு போய் நின்னு எங்கம்மாவையும் தம்பியையும் ஆச்சரியப்படுத்தப் போறேன். அப்படியே பூரிச்சுப் போயி எங்கம்மா என்னைக் கட்டித் தழுவிக்குவாங்க. கடனாளியா ஓடிப்போன மகன் கை நிறையப் பணம் கொண்டாந்திருக்கிறதைப் பார்த்து, எங்கம்மாவுக்கு எவ்வளவு சந்தோஷம் இருக்கும் தெரியுமா?'' ஏழையின் கற்பனைகூட, எல்லை மீறிப் போனது...ஆனல் இது வெறும் கனவாய், கற்பனையாய் முடிந்துவிடக் கூடியதல்லவே?

சிறிது நேர யோசனைக்குப் பிறகு எல்லம்மா சிரத்தையுடன் வினவினள்: ''அப்படீன்னு நீ ஊருக்குப் போறே,கடனை அடைச்சுட்டு ஊரோட இருந்திடுவே இல்லே?''

''ஆமா!'' எனப் பெருமிதமாகக் கூறினன்.

''நான் நெனச்சேன்... நாச்சிமுத்துமாதிரி நீயும் கார்ப்பரேஷனுக்கு ஐந்நூறு ரூபாய் கட்டிக் கண்டிராக்டு எடுத்துக்குவியோ... அவனைப் போலக் கொள்ளையோ கொள்ளேன்னு குவிக்க ஆசைப்படுவியோன்னு பார்த்தேன்!'' என்று வினவினள்.

''அப்படியுஞ் செய்யலாந்தான். ஆனல், எங்கம்மாவின் ஆசைக்கு, அவுங்க இத்தினி வருஷமா தவிக்கிற தவிப்புக்கு ஒரு வழி செய்யாம வேற எந்த லாபத்தையும் அது எத்தனை லட்சமானலும் சரிதான், நான் பார்க்கப் போறதில்லே. அவுங்க மனசு நிம்மதியாகணும். கடனாளியாச் சாகறோமேன்னு துடிக்கக் கூடாது! நான் அப்படிச் சாகவும் விடமாட்டேன். இது சத்தியம்!''

வாழ்வின் இன்னல்களில் அடிபட்டு அலைமோதித் தத்தளித்தாலும் பாசம் எனும் ஈரம், தன் நெஞ்சிலிருந்து உலர்ந்துவிடாமல் வாழும் தன்மை பெற்றவனுயிற்றே முத்தையன்.

ஐந்நூறு ரூபாய் கட்டிக் கண்டிராக்ட் எடுத்தால் இரண்டே வருடங்களில் ஆயிரம் ரூபாய்! அதற்கு மேலும் பெறலாம். பணத்

சக்திக்கும், வலிமைக்கும்!







ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.

காட்பரீஸ் போர்ன்-விடா

தைக் கொண்டு பணம் பண்ணும் கைவந்த வித்தை கண் முன்னே காத்துக் கிடக்கிறது.

முத்தையனை வாழ்க்கை அழைத்தது. ஆனால் இலட்சியம் தடுத்தது.

''நானும் என் தம்பி வேலுப் பயலும் எங்களோட சொந்த நெலத்துலே பாடு படுவோம். எங்க பரம்பரை நெலத்துலே பத்தகம் வச்சாலும் பாடுபட்டு மீட்ட சொந்த நெலத்திலே உழைப்போம்.'' சொல்லுக்குச் சொல் அவன் குரலில் பெருமை. பெருமகிழ்வு. கம்பீரம் யாவும் குபீர் குபீ ரென நிறைந்து பெருகின.

''எந்த நெலம் அடமானத்துக்குப் போனதனாலே எங்கம்மாவும் கூலிக்காரியா களை எடுக்கப் போயி நின்னு கடனை அடைக்கப் பாடுபட்டாங்களோ, அதே நெலத்துலே அண்ணனும் தம்பியுமா உழுது பயிர் பண்ணி 'அம்மா, இது நம்ம நெலத்துலே வௌஞ்ச நெல்லும்மா'ன்னு முதக் கதிரைக் கொண்டு போயிக் கொடுத்தே தீருவோம். ஒரு நாளைக் காச்சும் எங்க நெலத்துலே வௌஞ்ச அரிசியிலே சோறு பொங்கி அதுவும் எங்க அம்மாவே பொங்கிப் போட்டு நாங்க ஒன்னு ஒரே குடும்பமாச் சாப்பிடத்தான் போறோம். ஆஹா... அப்போத்தான் எங்க வாழ்க்கை நெறைஞ்சதா அர்த்தம்!''

மானமுள்ள சோறாகத் தாய்க்கு ஒருவேளையேனும் உணவிட்டுத் தீரவேண்டுமென்ற வெறித் தீயே அவனுள் இலட்சிய ஆவேசமாக வளர்ந்திருப்பது கண்டு அவள் நெஞ்சம் சிலிர்த்தது.

குப்பத்துப் பெண்களின் சிரிப்பலைகள் பின்னணியில் தேங்கி நிற்க, வெறி தணிந்த அயர்ச்சியுடன் நண்பர்கள் ஒவ்வொருவராகத் திரும்பி வருவதற்கும், உணர்ச்சிச் சுழலுக்குள் திக்குமுக்காடிச் சிக்கித் தவித்திருந்த முத்தையனுக்கு அவ்வளவு நேரம் மறந்திருந்த மார்வலி மீண்டும் எழுவதற்கும் சரியாக இருந்தது. நெஞ்சைப் பிடித்துக் கொண்டு துடித்தவனுக்குப் புதிய சோடா உடைத்துக் கொடுத்தாள் எல்லம்மா.

''ஆரும்மா இங்கே... எல்லம்மா?'' என இருளைக் கிழித்து எழுந்த குரலைக் கேட்டுத் திடுக்கிட்டான் முத்தையன்.

''தம்பீ... வேலப்பா!'' எனக் கதறிய படியே முன்னால் வந்தான் முத்தையன்.

''சீ...எட்டி நில்லு பட்டணத்துலே நீ நல்லா இருக்கியேன்னு சந்தோஷப்பட்டு ஒன்னைப் பார்க்க வந்தால் நீ இந்த இடத்துலே குடியும் கும்மாளமுமா....தூ!'' எனத் துப்பினான் தம்பி வேலப்பன்.

''டேய்.... டேய்.... நான் குடிக்கலேடா.... அம்மா மேலே சத்தியமா'' என முத்தையன் பதறினான்.

''நீ திரும்பி வரப் போறே, கடனை அடைக்கப் போறேன்னு நெனச்சு நெனச்சு அங்கே நானும் அம்மாவும் மாடா உழைச்சு மண்ணைத் தேஞ்சு போறோம். நீ குஷியாக் குடிக்கிறதும், கும்மாளம் போடறதும் வெக்கமாயில்லே....?''

முத்தையனின் பாச 'நெஞ்சம் பதை பதைத்தது. தான் கொண்ட இலட்சியத்துக்காக உடலை ஓடாக்கி உயிரையும் வதைத்து வாழ்ந்து வரும் அவனுக்கு அந்த இலட்சியம் முழுமை பெறும் நேரத்தில் தம்பியின் ஆதாரமற்ற குற்றச்சாட்டு துயரத்தைத் தந்தது.

''எங்க அண்ணாத்தை எங்கேன்னு ஒங்க முதலாளி நாச்சிமுத்துகிட்டே கேட்டப்போ, ஒரு மாதிரியா சிரிச்சுக்கிட்டே இடத்தைச் சொன்னாரு. அப்பவே சந்தேகப்பட்டேன். சரியாத்தான் போச்சு!'' என இகழ்ந்தவனை முத்தையன் பரபர வென்று தன் குடிசைக்குள் இழுத்து வந்தான்.

இன்னும் ஓரிரு தினங்களில் கிராமத்துக்குப் புறப்படும் நோக்கத்துடன் தயாராக அவன் வைத்திருந்த ஐந்நூறு ரூபாய்—ஐம்பது பத்து ரூபாய் தாள்களைத் தம்பியின் முன் எடுத்து வைத்தான்.

''எவ்வளவு இருக்கு இதிலே?'' என்று கேட்டான் தம்பி.

''ஐந்நூறு ரூபாய் !''

''இதோ இருக்கு கடன் பத்திரம்—வட்டி சேர்த்து நானூத்தி ஐம்பது ரூபா! அண்ணே, நீ குடும்பத்துக்கு மூத்த மகனில்லே ?''

''ஆமாண்டா....!''

''கடனை அடைக்க வேண்டிய பொறுப்பு உனக்குத்தானே?''

''ஆமாம் !''

''இந்தப் பணத்தை எப்படிச் சம்பாதிச்சே ?''

''நாத்தம் புடிச்ச தண்ணியிலே வெயிலைப் பார்க்காம, பொயலைப் பார்க்காம கூலிக்குப் படகு ஓட்டி, பைசா பைசாவா சேர்த்துச் சேமிச்ச ஐந்நூறு ரூபாய் ஆக்கியிருக்கேன்டா !''

''எத்தினி வருசமா சேர்த்தே ?''

---

**காலணிச் சட்டம்**

லெபனான் நாட்டில் ஒரு சட்டம் இருக்கிறது. இந்தச் சட்டத்தின்படி பூட்ஸ்களுக்குப் பாலிஷ் போட்டுக் கொள்ள வருபவர்கள், பூட்ஸ்களைத் தனியே கழற்றிக் கொடுக்க வேண்டும். காலணிகளுக்குப் பாலிஷ் போடுபவர்களின் கௌரவத்தைக் காப்பதற்காக இந்த உத்தரவைப் பிறப்பித்தவர் லெபனான் நாட்டு உள்துறை அமைச்சர்.

ஆனால் பூட் பாலிஷ் போடுபவர்கள் இந்தச் சட்டத்தை மிகவும் எதிர்க்கிறார்கள். ''அமைச்சர் சொன்ன வழியில் எங்கள் கௌரவத்தைக் காக்க எண்ணினால் எங்கள் வயிறு காய நேரிடும். எங்கள் கௌரவத்தைக் காக்குமுன் எங்கள் வயிறு நிறைய வழி செய்யுங்கள்'' என்கிறார்கள்.

தகவல்: இ. சிவசுப்பிரமணியன்

"மூணு வருசமா....!"

"இன்னும் மூணு வருசத்துக்கு இதே மாதிரி நாத்தம் புடிச்ச தண்ணியிலே கூலிக்குப் படகு ஓட்டிப் பைசா பைசாவா சேமிச்சு மொத்தமா ஐந்நூறு ரூபாயைச் சேர்த்துக் கொண்டு போயி அம்மாகிட்டே குடு...!"

"ஏய்.... என்னுடா சொல்றே?" எனப் பதறிப் போனான் தமையன். உடலை வதைத்துத் தன் உயிரின் விலையாகச் சேமித்து வைத்திருக்கும் ஐந்நூறு ரூபாய்க்குத் தம்பி எந்த விதத்தில் உலை வைக்க வந்திருக்கிறான்!

"மகனாகப் பொறந்த பாவத்துக்கு நானும் இத்தினி வருசமா அம்மாவோட பாடுபட்டு, பாழாப் போன நெலத்தோட போராடினதுதான் மிச்சம்.... ஆனா அம்மாவுக்கு இன்னும் நெலத்தை வெறுக்கிற மனசு வரலே......!"

"ஏய்! நீ இன்னா திட்டத்துலேடா வந்துக்கிறே?" எனச் சீறத்தான் முடிந்தது முத்தையனால்.

"அண்ணே, நீ பட்டணத்துலே ஒழைக்க வந்தே. நான் பொழைக்க வந்தேன். எனக்கும் எதுனாச்சியும் வழி சொல்லுவான்னு ஒன்னைத் தொல்லைப்படுத்தத்தான் வந்தேன். நீயாகவே பணத்தைக் குடுத்து காரியத்தைச் சுலபமாக்கிட்டே. வர்றேண்ணே!" என்ற வேலப்பன் கதவைத் திறந்துகொண்டு பணத்துடன் ஓடியே போய்விட்டான்.

இடி விழுந்த மரமாய் நின்றான் முத்தையன். இரத்தம் உறைந்து சில்லிட்டது. சொந்த நிலத்தில் விளைவித்துத் தாய்க்குச் சோறு போடுவேன் என எடுத்துக் கொண்ட இலட்சிய சபதத்தை நிறைவேற்ற இன்னும் எத்தனை ஆண்டுகளானாலும் என்ன? அவன் அதையே தொடர்ந்து செய்யத் தயாரானான்.

துயர் சுமந்த நெஞ்சத்துடன் என்றோ தொடங்கிய பயணத்தைத் தொடர வேண்டிய நிர்ப்பந்தத்தில் முத்தையன் மறுவாரம் அவர்களின் வழக்கமான துறைமுகமான ஹாமில்டன் வாராவதியை நெருங்கிய போது —

அங்கே நாச்சிமுத்து இல்லை. அதைவிட அதிகத் தொகை செலுத்தி நகரசபை அங்கீகாரம் பெற்று, கூலியாட்களின் உழைப்பைக் கண்டிராக்டு எடுத்திருக்கும் புதிய கண்டிராக்டர் வேலப்பன்தான் இருந்தான்!

## 2

பசியையும் பாசத்தையும் வெல்லும் தன்மை பெற்ற பணத்தை, இது வரை இலட்சியமாகச் சேமித்து வைத்திருந்த பணத்தை, தம்பியின் ஒரு சொல்லிலே கொடுத்துவிட்டு நின்ற முத்தையனுக்குத் தான் இழந்த அப்பணத்தின் காரணமாகவே தனக்கு முதலாளியாக வந்துவிட்ட தம்பியிடம் பணி புரிய மனம் ஒப்பவில்லை.

வாழ்ந்துவிட வேண்டும் என்ற வைராக்கியமும், வாழ்ந்து விடுவோம் என்ற நம்பிக்கையும் நெஞ்சு நிறைய இருந்தாலும் வாழ்வதெப்படி என்பதுதான் முத்தையனுக்குப் புதிராகவே இருந்தது.

மூன்றாண்டுகளுக்கு முன்னர் சென்னையம்பதியை மிதித்த கால்களில் வலுவிருந்தது, கைகளில் துடுப்பு போடும் அளவுக்கேனும் உரம் இருந்தது. இன்றோ நெஞ்சிலே விழுந்த அடி அவன் உடலையும் பாதித்து விட்டது.

பழைய முதலாளி நாச்சிமுத்து அடையாறு பகுதியில் கண்டிராக்ட் எடுத்திருப்பதாகக் கேள்விப்பட்டு, முத்தையன் அங்கே விரைந்தான்.

நெஞ்சிலே கனலுடன் அவனை வரவேற்றான் மாஜி முதலாளி. "அயோக்கியப் பயலே! எங்கிட்டே கூலிக்காரனா இருந்திட்டே, உந்தம்பி பேரிலே டெண்டர் குடுத்தவனில்லே நீ. அவன் பேரிலே கண்டிராக்டு எடுத்தவன், அவன் கூடவே இருக்கிறதுதானேடா...? ஏன் வந்தே என்னைத் தேடி?" எனச் சீறி வெடித்துச் சினந்து கொண்டிருந்தான்.

"சார்! எந்தம்பி கண்டிராக்டுக்குக் குடுத்தது எம்பணந்தான். ஆனா எந்தம்பிக்குக் குடுத்தவன் நானில்லே. எங்கிட்டேயிருந்து எடுத்தவன்தான் அவன். என்னை நம்புங்க...." எனத் தெளிவும் தீர்க்கமுமாகச் சொன்ன முத்தையனிடம் நாச்சிமுத்துவுக்குப் பழைய இரக்கம் திரும்பியது.

"சரி, சரி.... வேலையை ஒத்துக்க. ஆனா இப்போ நொடிச்சுப் போயிருக்கிற என்னால் பழைய கூலி தர முடியாது. அதெ இப்பவே சொல்லிட்டேன்!"

மறுபேச்சின்றி முத்தையன் வேலையை ஒப்புக் கொண்டான். ஆடிக் காற்றில் அலைக் கழிக்கப்படும் துரும்பாக மிதந்து கொண்டிருக்கும் அவனுக்கும் ஆதாரமாக இடம் தந்திருக்கும் நாச்சிமுத்துவை நாவாரப் பாராட்டி, மனமாரக் கைதொழுதான் முத்தையன். குறைந்த கூலியானாலும் நிறைந்த மனத்துடன் நேர்மையாகவும், அதே சமயம் நிம்மதியாகவும் வாழும் வழிமுறையைத் தெரிந்து கொண்டான் முத்தையன்.

இரண்டாண்டுகள் இதே கதியில் இயங்கிக் கொண்டிருந்த அவன் வாழ்வில் சிலிர்ப்பைத் தரும் சம்பவங்கள் இரண்டொன்று நிகழ்ந்தனவென்றால், பழைய நாட்கள் போல் எல்லம்மாவின் சகாயத்தால் அல்ல. நிலை தடுமாறிப் போன வேலப்பனின் போக்கினால்தான்!

இன்பத்தை அதிக விலை கொடுத்து வாங்கும் பணக்கார வர்க்கத்தை எட்டிப் பிடித்துவிட்ட வேலப்பன், அவர்களுக்குரிய படாடோபமும், கர்வமும் கொண்டு நடக்கத் தலைப்பட்ட போது, 'இறைவா, என் தம்பியைத் திருத்த மாட்டாயா?' என, தாயின் சார்பாக நின்று முத்தையன் வேண்டிக் கொள்வான். தாய்க்குத் தலைமகன் என்ற பொறுப்பால் நிலத்தை மீட்கும் சுமையைத் தன் ஒருவனின் கடமையாகக் கருதி, ஓடாய் உழைத்துக் கொண்டுதான் இருந்தான். குடும்பத்தில் பாசம் கொண்ட ஒரே நபர் அவன்தான். பாசத்தின் மற்றொரு பெயர் கடமை என்பதையும் அவன் பூரணமாக உணர்ந்திருந்தான்.

துறைமுகமான ஹாமில்டன் வாராவதியிலிருந்து சுமைகளின் பொறுப்பெடுத்துச் செல்லும் படகோட்டியாகத் துடுப்பை


COLGATE
TOOTH POWDER


COLGATE
DENTAL CREAM

# Zam-Buk

ஜாம்-பக்
சிறந்த
மூலிகைக்
களிம்பு




ஜாம்-பக், பாரதத்தின் உன்னதமான மூலிகைக் களிம்பு; விரைவாகவும் பத்திரமாகவும் பூரணமாக குணப்படுத்த உதவுகிறது.

Bensons/1-FZ-12 TAM


தீப்புண்களுக்கு


ரணங்களுக்கு


முகப் பருக்களுக்கு


தேய்த்துவிடுவதற்கு

வலித்துக் கொண்டிருந்த போது, தவறி விழுந்த விறகுக் கட்டினூடே.....

நியாயவானகத் திருந்திவிட்ட முத்தையன் திடுக்கிட்டான். விறகுச் சுமைகளினூடாகத் திணித்து வைக்கப்பட்டிருந்த மதுக் குப்பிகள், யாரிடமிருந்து யாருக்குப் பரிமாறப்படுகின்றன என்ற காரணங்களை அறிய அவனுக்கு அவகாசம் இல்லை. ஆனல் இந்தக் கள்ளக் கடத்தலுக்குத் தன் தம்பியும் ஒரு வகையில் உடந்தை என எண்ணிய போது நெஞ்செல்லாம் கொதித்தது!

வாழ்க்கை இனிக்கிறதே என்ற சந்தோஷம் வேலப்பனுக்கு. வாழ்க்கை இருக்கிறதே என்ற வேதனை முத்தையனுக்கு!

கிராமத்திலிருந்து துயர் கனக்கும் செய்தி வந்தது முத்தையனுக்கு. முத்தையனின் தாயார் சாகக் கிடக்கிறளாம்!

''அம்மா!'' என்ற அலறல் தனயனின் நெஞ்சைப் பிளந்து, எழுந்தது. எழுந்தும் என்ன பயன்? உன்னத இலட்சியங்களை உயர் கோபுரமாய் வளர்த்து, அவற்றை ஒரு நொடியில் எளிதாக முடித்தும் விடுகிற வசதியும், வல்லமையும் பெற்ற மக்கள் நிறைந்த இந்த உலகில் ஒரு கவளம் சோற்றை நிம்மதியாக நிறைந்த நெஞ்சுடன் தாய்க்குப் போட வேண்டும் என்பதை இலட்சியமாகக் கொண்டு, அதனையே சத்திய ஆவேசமாய் வளர்த்தும்கூட, இன்னும் அதை ஈடேற்ற முடியாத தன் ஏழ்மையை எண்ணி நொந்து கொண்டான். பசியை வென்றும் பாசத்தை வெல்ல முடியாமல், தம்பியிடம் பணத்தைப் பறிகொடுத்த பரிதாபத்தை எண்ணிக் கலங்கினன் முத்தையன்.

என்ன இருந்தும் என்ன? ஐந்நூறு ரூபாயோடு இந்த நாலு வருடங்களில் ஏறிப் போயிருந்த வட்டி சேர்த்து, எழுநூறு ரூபாய் கையிலிருந்தால் தாயைக் காண முடியும். இத்தனை வருடங்களாக முதலுக்கு உழைத்தவன், இத்தனை ஆண்டுகளில் ஏறிப் போயிருந்த வட்டிக்கு இன்னும் உழைத்து முடியவில்லையே....!

இல்லையென்ருல், தாய்க்கு இரண்டு மகன்களிலிருந்தும் இறுதி நேரத்தில் ஒருவன் குடி போதையில் தன்னிலை இழந்தவனுகவும், மற்றவன் சுயநினைவோடு கூடிய வேதனையைச் சுமந்து வாழும் துர்ப்பாக்கிய சாலியாகவும் எங்கோ பிரிந்திருக்க, தனி மரமாய் நின்ற பின்னர் தானகச் சரிந்து விழத்தான் வேண்டும்!

பாசத்தின் முன்னே ஏழ்மையின் கடும் போர். பாசத்துக்கு என்ருவது வெற்றியுண்டா? கடந்த நான்கு ஆண்டுகளாகச் சேமித்த ஐந்நூறு ரூபாய்க்கும் அப்பால் தேவைப்படும் இருநூறு ரூபாய்க்கு எங்கே போக முடியும்?

இருள் கவிந்த இதயத்துடன் சோக பிம்பமாய்த் தடுமாறிய முத்தையனின் நிலையை உணர்ந்தான் முதலாளி நாச்சிமுத்து. முத்தையனின் வரவுக்குப்பின் தன்னல் மீண்டும் தழைக்க முடிந்தது என்பதை ஓரளவு உணர்ந்ததாலேயே முதலாளி முத்தையனுக்கு உடனடியாக உதவத் தயங்கவில்லை.



''ஏன் ஸார்! இந்தப் புத்தகத்திலே திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப் படுகின்றன என்று போட்டிருக்கே....?''

''சும்மா 'டூப்பு' ஸார் நம்பாதீங்க! நரகத்தில் தான் நிச்சயிக்கப் படுகின்றன!''

நாச்சிமுத்துவின் கருணைக்கு நன்றி சொல்லிக் கொண்டே எழுநூறு ரூபாயை விட்டெறிந்து நிலத்தை மீட்டான் முத்தையன். அழிந்து போன ஒரு தலை முறையின் வறுமை, வரப் போகும் சந்ததியையே கடனில் அழுத்தி விடாமல் இருக்க, பந்தகமாய் வைத்த நிலத்தை மீட்டு விட்டான். நைந்து கிடந்த தாயின் இதயத்துள் நம்பிக்கை துளிர்த்தது.

அவனுக்கும் வாழ்க்கை இருக்கிறது எனச் சொல்லுவதுபோல், மகனின் ஒட்டுறவிலே உள்ளத்தின் தளிர்ப்பைக் கண்டாள்.

தாயும் மகனுமாக உரம் நிறைந்த உள்ளத்துடன் தம் சொந்த நிலத்தில் பாடுபட்டாலும் அதைப் பக்குவப்படுத்தி விளைநிலமாக்கச் சிறிது காலம் பிடித்தது.

அந்நிலையிலும் தம்பி தங்களுடன் ஒட்டாமல் இன்னும் தனித்தே வாழ்வது குறித்து, முத்தையனுக்கு வேதனைதான்.

அறுவடைக் காலம் வந்ததும் முதல் கதிர் அறுத்துப் பொங்கிப் பூரித்த புது மகிழ்வுடன் தாயின் கரங்களில் கொடுத்த முத்தையனின் நெஞ்சம் உழைப்பின் வெற்றிக்கு வாழ்த்துப் பாடிக் கொண்டிருந்தது.

எத்தனையோ ஆண்டுகளின் வறுமையில் வாடியிருந்த தாயின் உள்ளத்துக்கு இந்த உற்சாகத்தைத் தாங்கும் வலுவில்லையோ என்னவோ.....? வயோதிகமும், அதை மிஞ்சிய வறுமையுமாகச் சேர்ந்து உள்ளூற நைந்திருந்த தாயின் உள்ளம், மகனின் இலட்சிய ஆவேசம் வெற்றி பெறும் வரை தான் காத்திருக்க வேண்டும் என்றிருந்ததோ?

சொந்த நிலத்தில் விளைவித்த நெல்லைச் சோறு சமைத்து ஊர் மக்களுக்கும் இட்டுத் தானும் மகனுமாய், மற்றொரு மகனின் நினைவு நெஞ்சினின்றும் நீங்காத நிலையில், உண்ணும் போது தாயின் நெஞ்சில் நன்றியே காணிக்கையாகப் பெருகி வழிந்தது:

'புதை மண்ணிலே தன் எண்ணங்களை, இதயத்து நம்பிக்கைகளை விதைக்கவில்லை; நல் நம்பிக்கை, விளைநிலத்து வித்துதான், ஒரு நாளும் அது வீண் போகவில்லை' என்ற நம்பிக்கையின் வெற்றியில் தாயின் நெஞ்சம் நிறைந்து மகிழ்ந்து, அதன் நிறைவிலேயே துடிப்பையும் இழந்து விட்டது.

தாயின் மரணத்துக்குப் பின்னர் முத்தையனின் முழுக் கவனமும் தன் நிலக் கீற்றிலேயே திரும்பியது. இது வரை தாய்க்கும் தன் தம்பிக்குமாக வாழ்ந்திருந்த அவன், இனிமேல்தான் தன் வாழ்வைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கியிருந்தான்.

நிலக் கீற்றை நிலப் பாத்தியாக்கி, சிறுகச் சிறுகப் பண்ணையுமாக்கி, மண்ணின் குரலை மனதாரச் செவிமடுக்க வேண்டுமென்ற ஆசைத் துடிப்புகளுடன் முனைந்து பாடுபட்டான்.

ஆறே மாதங்களில் அவன் பண்ணை கொழித்தது. "மண்ணெப் பத்தித் தாழ்வா பேசாதேடா. என்னைக்கும் சோறு போடப் போறவ அந்த மாதாதான்!" என்ற தாயின் வாக்கு அவனை உற்சாகப்படுத்திக் கொண்டிருக்க, அந்த உற்சாகமே உழைப்பாகி, உழைப்பே இன்று ஊதியமாகிப் பொங்கிப் பெருகிப் புது வளமாய் நிறைந்திருந்த வேளையில் —

திடீரென ஒரு நாள் அலங்கோலமாக வந்து நின்றான் வேலப்பன்.

"என்னடா கோலம் இது?"

"அண்ணே....!" எனக் கதறியழுதவனைக் கட்டியணைத்துத் தேற்றினான், முத்தையன்.

"என்னடா தம்பி, இப்படியாயிட்டே?" என அந்நிலையிலும் பாசம் தலைதூக்க, தம்பியிடம் வாஞ்சையுடன் வினவினான்.

"கள்ளக் கடத்தல் கேஸிலே ஒரு வருஷம் உள்ளே போயிட்டு வந்திருக்கேண்ணே!"

'எதிர்பார்த்ததுதான்' என்பதுபோல் ஒரு விநாடி மௌனமாக நின்ற சகோதரன், "ஓ.... அதனாலேதான் அம்மா செத்தப்ப கூட நீ வரலியோ?" என்றான்.

"அதுக்குக்கூட நான் குடுத்து வைக்காத பாவியண்ணே....!" எனக் கதறியவன் சடாரென அழுகையை நிறுத்திவிட்டு, "அண்ணே! ஊரைச் சுத்திக் கடன். திருப்பிக் குடுக்காட்டா! என் கழுத்துக்குக் கத்திதான். அவசரமா இரண்டாயிரம் ரூபாய் வேணும்!" என்றான்.

"ரெண்டாயிரமா.... டேய்.... டேய்.... நான் எங்கேடா, போவேன்?" எனத் தடுமாறினான் பாசநெஞ்சமுள்ள தமையன்.

"தெரியாத்தனமா அகப்பட்டுக்கிட்டேண்ணே! என்னாலே மீறி வெளியே வரவே தெரியலே" எனத் துடித்தான் வேலப்பன்.

"தண்ணியிலே எறங்கவே தைரியமில்லாதவன், எதிர்நீச்சல் போட முடியலியேன்னு வருத்தப்பட்டால் முடியுமாடா? விபரீதம்னு தெரிஞ்சும் விதை விதைக்கலாமா?" என்று கடிந்து கொண்டாலும் அவன் மனம் எதையோ கணக்கிட்டுக்கொண்டிருந்தது.

பாசத்தினால்தான் நம்மால் வாழ முடிகிறது என்பதை வேலப்பனின் நிலை உணர்த்திக் கொண்டிருந்த அதே வேளையில் பாசத்துக்காகத்தான் நாம் வாழ்கிறோம் என்பதை முத்தையன் நிரூபித்துக் கொண்டிருந்தான். வெளியே போய் வந்தவன், தம்பியிடம் ஆயிரம் ரூபாயைத் திணித்தான்.

"ஏதுண்ணே இது.....?"

"ஏதுவும் கேட்காதே...!. புறப்படு.... பட்டணத்திலே இன்னொரு ஆயிரம் தர்றேன். அதோட ஒரு சின்ன வேண்டுகோள்டா தம்பீ..... அதுக்கப்புறமாவது என்னை நிம்மதியா வாழவிடு!" எனக் கூறியவன், சலனத்தை வென்ற உறுதியுடன் பட்டணம் நோக்கிப் புறப்பட்டான்.

பந்தகமாய் வைத்திருந்த நிலத்தைப் பணத்துக்கே விற்றுவிட்டு, அதோடு மாங்குளத்தின் உறவையே விட்டொழித்துவிட்டு முத்தையன் புறப்பட்டான்.

வாழ்க்கை வாழ்வதற்காகவும் இருக்கலாம்; வாழ வைப்பதற்காகவும் இருக்கலாம்! முத்தையனின் வாழ்க்கை இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தது என்பதை அவன் காட்டிய முடிவு மெய்ப்பித்துவிட்டது!

காலக் கணக்கின்றி நாச்சிமுத்துவிடம் தன் உழைப்பைப் பந்தகம் வைத்து விட்டு, இன்னுமோர் ஆயிரம் ரூபாய் பெற்று, வேலப்பனிடம் கொடுத்துத் தம்பியைக் கடனிலிருந்தும் விடுபடச் செய்தான். ஐந்தாண்டுகளுக்கு முன்னர் அவனே ஐந்நூறு ரூபாய் கொடுத்து, பக்கிங்காம் கால்வாயில் கண்டிராக்ட் எடுக்கும் சந்தர்ப்பம் இருந்தபோது, வாழ்க்கை அழைத்தது. இலட்சியம் தடுத்தது. இப்போதோ இலட்சியம் வென்றது. வாழ்க்கைதான் முறிந்தே போய்விட்டதே!

இலட்சியவாதியான முத்தையன் வென்றான். ஆனால் மனிதாபிமானமும், பாச நெஞ்சமும் கொண்ட அவனால் தன் வாழ்க்கைக்கு மட்டும் விடிவு காலம் தேடிக் கொள்ள முடியவில்லை.

ஒவ்வொருவருக்கும் ஒருசில இலட்சியங்களும், ஒருசில பலவீனங்களும் இருக்கலாம்.

முத்தையனுக்கு இரண்டும் ஒன்றே. அவனுக்குப் பாசமே இலட்சியம்; பாசமே பலவீனம்!

சென்னை நகரத்தின் அழுகிப் போன குடலாய் நெளிந்து கிடக்கும் பக்கிங்ஹாம் கால்வாயில் மழை பெய்தவுடன் எழும் குபீர் நாற்றத்தைப் பொறுத்தபடி, மழைத் துளிகள் ஊசி முனையாய்க் குத்தத் தொடங்கி விட்ட சமயத்திலும், உடல் வலுவையெல்லாம் ஒன்று திரட்டித் துடுப்புக்கோலைத் தண்ணீரின் அடி ஆழத்தில் ஊன்றி நரம்பெல்லாம் முறுக்கேறித் தெறிக்க, படகை முன்னுக்குத் தள்ளி விரையும் முத்தையன், முகத்தில் சில்லென விசிறித் தெறிக்கும் நீரையோ, கன்னென உறைக்கும் வெய்யிலையோ பொருட்படுத்தாமல், வெறியுடன் படகு நிறைய விறகுக் கட்டைகளையோ, வைக்கோற் பிரிகளையோ சுமந்து கொண்டு இன்னும்.... இன்னும் தொடர்ந்து போய்க் கொண்டேயிருக்கிறான்!

என்றோ தொடங்கிய அவன் பயணம் முடியவேயில்லை!

# இவர்தான் அண்ணா

''அண்ணா!''

இந்தப் பெயர் இன்று இந்தியத் துணைக் கண்டத்தில் ஒரு மகத்தான சக்தியாகத் திகழ்கிறது.

இரும்புத் திரை போட்டு மாற்றார்களால் இருட்டடிப்புச் செய்யப்பட்டு வந்த அந்தச் சக்தி, மறைக்க முடியாத ஆற்றல் மிக்க சக்தியாக உருவாகியிருக்கிறது.

அரசியலின் ஆழ்ந்த ஞானம், சமூகத்தைப் பற்றிய தெளிவான அறிவு, மனித உள்ளத்தைப் புரிந்து கொள்ளும் மனத் தத்துவம், பொருளாதாரக் கூறுபாடுகள், கலாசார வரையறை, விஞ்ஞான சாதனைகள் போன்ற பல துறைகளையும் உணர்ந்து கொண்டு, அவற்றின் உண்மையான கோட்பாடுகளில் இரண்டறக் கலந்து, மறுமலர்ச்சிச் சக்தியாக அந்தச் சக்தி மலர்ந்திருக்கிறது.

பல துறைகளிலும் ஆழ்ந்த அறிவு பெற்றுள்ள இந்தக் காரணத்தாலேயே தெளிந்த உள்ளங்களின் ஒருமித்த பாராட்டையும், பெருமதிப்பையும் அந்தச் சக்தி பெற்றிருக்கிறது.

இன்றைக்கு இந்திய அரசியலில் ஜனநாயகத்தை முழு அளவில் நம்பியிருக்கிற, வளர்க்க விரும்புகிற உண்மையான ஜனநாயக அரசியல் அறிஞர் அண்ணா அவர்கள்.

எதிரிகள் ஆனாலும் அவர்களுடைய கருத்தையும் கேட்க வேண்டும் என்ற நெறியையும், எதிரிகளையும் தம் கருத்துக்கு இசைய வைக்கும் ஆற்றலையும் படைத்துக் காட்டி, பண்பு மிக்க அரசியலை இந்த நாட்டில் உருவாக்கியவர் அண்ணா அவர்கள்.

அறிஞர் அண்ணா அவர்களின் அரசியல் நுழைவுக்குப் பிறகுதான் வெவ்வேறு கருத்துடையவர்கள் ஒரே மேடையில் சந்தித்து விவாதிக்க முடியும் என்ற உயர்ந்த அரசியல் நாகரிகம் உருவாக ஆரம்பித்தது.

அரசியல் இயக்கம் என்பது உணர்ச்சிகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் இடையே போடப்படுகிற ஒரு 'கணக்கு' என்ற நிலையை மாற்றி, ஓர் இயக்கத்தில் ஈடுபட்ட அத்தனை பேரையும் குடும்ப உணர்ச்சி கொள்ள வைக்கும் ஒரு புதிய சித்தாந்தத்தை ஏற்படுத்திய தத்துவவாதி அண்ணா அவர்கள்.

விஞ்ஞானத்திலே ஈடுபட்டவர்கள் மனித வாழ்க்கை முறையைப் பற்றியோ பண்பாட்டைப் பற்றியோ அதிகம் சிந்திப்பதில்லை. ஏன், சிந்திப்பவர்களே குறைவு என்றும் கூறலாம்.

ஆனால் விஞ்ஞானம் ஏனைய துறைகளோடு கலந்து பண்பாட்டோடு இணைந்து, மனிதனை ஆக்கும் சக்தியாக வளர வேண்டும் என்று விரும்புகிறவர் அண்ணா அவர்கள்.

மனிதர்களுடைய மனம் எதையும் சரியாக எண்ண வேண்டும் என்பதும், அந்த எண்ணத்தை வளர்ப்பதற்கு எல்லாவற்றையும் பற்றிய அறிவை அவர்கள் பெற்றே ஆக வேண்டும் என்பதும் அண்ணா அவர்களின் நோக்கம்.

பொருளாதாரத்தை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு, சமூக மேம்பாட்டுக்குரிய தேவைகளைப் பற்றிச் சிந்திப்பது அரசியல்வாதிகளிடையே வழக்கமாக இருந்து வருகிறது.

ஆனால் மனித மனத்தையும், பொருளாதாரத்தையும், இயற்கைத் தத்துவத்தையும் ஒன்றாக இணைத்து, ஒரு புதிய சமுதாயத்தைக் காணக் கனவு கண்டுகொண்டிருப்பவர், அண்ணா அவர்கள்.

ஆற்றல் மிக்கவர்கள் மட்டுமே அரசியலில் தலைவராக வர வேண்டும் என்றிருந்த இலக்கணத்தை மாற்றி, ஆற்றல் மட்டும் போதாது, அன்பும், நல்ல பண்பும் வேண்டும், அப்பொழுதுதான் வளமான ஜனநாயகம் அரசியலில் வளர முடியும் என்ற புதிய அரசியல் கோட்பாட்டை உருவாக்கி, அதற்கு இலக்கியமாக ஓர் இயக்கத்தை நடத்திக் கொண்டிருக்கிறார் அண்ணா.

எல்லோராலும் ''தகுதியுள்ள ஓர் உயர்ந்த ஸ்தானத்தைப் பெறும் அரசியல்வாதி'' என்று பாராட்டப்படும் நிலை யாருக்கும் எளிதில் கிடைத்து விடாது. எந்தத் தனி மனிதரும் பிறரால் பாராட்டப்படும்போதோ, உற்சாகப்படுத்தப்படும்போதோ, பெருமைப் படுத்தப்படும்போதோ, தன்னையே மறந்து விடும் நிலையை அடைவது தவிர்க்க முடியாததாகும்.

சர்வாதிகார நிலைமையில் செயல்படும் போக்கு அந்தக் குறிப்பிட்ட மனிதரிடம் உண்டாவதும் இயற்கையாகும்.

ஆனால் அண்ணாவைப் பொறுத்தவரையில் இது நேர்மாறானது.

எவ்வளவுக்கெவ்வளவு அவர் உயர்த்தப்படுகிறாரோ, தோழர்கள், தொண்டர்கள், பின்பற்றி வருபவர்கள் முதலியவர்களால் எவ்வளவுக் கெவ்வளவு பாராட்டப்படுகிறாரோ, அந்த அளவுக்கு மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு முன்னிலும் அதிக

# எம்.ஜி.ராமச்சந்திரன்

அடக்கத்தோடு, தன்னை மிக மிகச் சாதாரண குடிமகனுக்கிக் கொள்ளும் பண்பை அண்ணாவிடத்தில் நான் காண்கிறேன்.

உலக அனுபவமே பெறாத சிறு குழந்தைகளுக்குங்கூடப் பழி வாங்கும் நோக்கம் உண்டாவது தவிர்க்க முடியாததாயிருக்கிறது.

ஆனால் அண்ணா அவர்களோ, தன்னையே இகழ்ந்து தலைகுனியச் செய்யும் அளவுக்கு ஏசிச் செயல்படும் ஒருவர் தமது கட்சிக் கட்டுப்பாட்டுக்குள் இருப்பவராயிருந்தால் கூட, தம் கட்டளையை மீறிக் கட்சியில் இருக்கவே முடியாதவர் என்றாலும் கூட, அவர்மேல் அநுதாபத்தைச் செலுத்துவாரே தவிர, அவருக்காக மற்றவரிடம் பரிந்து வாதாடுவாரே தவிரப் பழி வாங்கும் உணர்வு அவர் உள்ளத்தில் இடம் பெற முடியாத ஒன்றாகும்.

அண்ணா அவர்கள் சொல்லியிருக்கும் ஒரு வாக்கியமே இதற்கு உதாரணமாக அமைந்திருப்பதைச் சொல்லலாம்.

> ''என்னை யார் வேண்டுமானாலும் வெறுக்கட்டும்; என்னை அழித்துவிடவே முயலட்டும். ஆனால் நான்மட்டும் யாரையும் இழக்க முடியாது. அதைச் செய்ய வேண்டுமென்றால் அதற்கு வேறு ஆளைப் பாருங்கள்.'' இவர்தான் அண்ணா! தமிழ் மக்களின் தனித் தலைவர்.

ஆனால் சில சமயம் இந்த இவருடைய நல்ல பண்பைச் சிலர் தங்கள் சுயநலத்துக்குப் பயன்படுத்துகிறார்கள் என்று தெரிந்தும்கூட அவர்களும் ஒருகாலத்தில் திருந்தி நல்வழிக்கு வந்துவிடுவார்கள் என்று நம்பிக் காத்திருப்பவர் நம் அண்ணா. பலமுறை அப்படி நிறைவேறியும் இருக்கிறது.



தம்முடைய கட்சி வெற்றி பெறவேண்டுமென்பதற்காகச் சமுதாய நலனையோ, தனி மனிதர்களின் வளர்ச்சியையோ சிந்திக்காமல் செயல்படுவதை அறவே வெறுப்பவர் அண்ணா. அவருக்குத் 'தனி மனிதர்களின் வளர்ச்சியும், அதன் மூலம் சமுதாய வளர்ச்சியுமே முக்கியம்.

கட்சி என்பது என்ன? பல மனிதர்களின் சேர்க்கைதானே? சமூகமும் அப்படித்தானே!

தனி மனிதர்களை வளர்க்க முடியாத கட்சி சமுதாயத்தை எப்படி வளர்க்க முடியும்?

அதனால்தான் தமது கட்சியில் உள்ள எல்லோருமே அறிவிலோ, அனுபவத்திலோ, திறமையிலோ, தியாக உணர்விலோ, தகுதியிலோ குறைந்தவர்களாக இருக்கக் கூடாது என்று அவர் கருதுகிறார்.

பொதுவாகவே அரசியல் கட்சிகளில் உள்ள தலைவர்கள் திறமை மிகுந்த பிறர் தங்கள் கட்சிக்குள் வந்தால் எங்கே தங்களுடைய பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று அஞ்சுவதைக் காண்கிறோம்!

இதற்கு மாறாக அண்ணா அவர்கள் அறிவும், திறமையும் மிகுந்தவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகக் கட்சியில் இருக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு கட்சிக்கு நல்லது என்று கருதுபவர். அவர்களை வரவேற்கவும் செய்கிறவர்; வளர்க்கவும் செய்கிறவர்.

வளர்த்த கடாவே மார்பில் பாய்வது அரசியல் இயக்க வரலாறுகளிலே வழக்கமாக நடைபெற்று வருகிற சம்பவம் என்றாலும்கூட அப்படிப்பட்ட தீய சக்திகளால் தம்மை அழித்துவிட முடியாது என்ற தன்னம்பிக்கையும் ஆற்றலும் படைத்தவர். எத்தனையோ அரசியல் கட்சிகளில் ஒவ்வொரு தகுதியில் சிறந்தவர் வளர்வதைக் கண்டிருக்கிறோம்.

ஆனால் அழகு தமிழில் எழுதக் கூடிய ஆற்றல் பெற்றோரை, உணர்ச்சி மிக்க தமிழில் உரை நிகழ்த்தும் திறன் மிக்கோரை, புதுமைக் கருத்துப் படைக்கும் சிறப்பு வாய்ந்த நாடக ஆசிரியர்களை, துள்ளும் தமிழ் நடையிலே கவிதைகள் பொழியும் நல்ல பல கவிஞர்களை, பகுத்தறிவுடன் இன்பத்தைக் கலந்து அளிக்கும் இலட்சியம் உள்ள கலைஞர்களை, பண்புமிக்க அரசி

யலே நடத்தக்கூடிய தகுதி மிக்க தலைவர்களை இன்னும் பலப்பல அரிய சக்திகளையெல்லாம் இந்த நாட்டில் தோற்றுவித்திருக்கும் பேராற்றல் மிக்க மாபெரும் சக்தி அறிஞர் அண்ணா அவர்கள்தான்.

இவரால் தோற்றுவிக்கப்பட்டவர்களில் பலர் வேறு இயக்கங்களில் இருப்பார்கள். ஆனால் தோற்றுவிக்கும் சக்தியாக இருப்பவர் அவர் என்பது நான் கண்கூடாக அறிந்த உண்மை.

எத்தனையோ பேர் தொண்டர்களால் தலைவர்களாக்கப்படுகின்றனர்.

ஆனால் அண்ணாவின் ஸ்தானம் யாராலும் அளிக்கப்பட்டதில்லை.

அந்த ஸ்தானத்துக்காகவே உருவானவர்.

அவருடைய செயல் அவருக்கு அந்த ஸ்தானத்தைக் கொடுத்ததே தவிர, பிறருடைய செயலால் கொடுக்கப்பட்டதுமில்லை; பிறரிடமிருந்து வாங்கிக் கொடுக்கப்பட்டதுமில்லை. அவருக்கு என்று இருந்தது அந்த ஸ்தானம். அவருக்கே சொந்தமாகிவிட்டது அந்த ஸ்தானம். இந்த உயர்ந்த ஸ்தானத்தின் ஏகப் பிரதிநிதியாகத் திகழும் அவர் மக்களின் பிரதிநிதிகள் என்ற பெயரில் ஆட்சி நடத்தும் ஆட்சியாளர்களின் அடக்குமுறைக்கும், எதிர்ப்புகளுக்கும் ஈடு கொடுத்து, பொது இயக்கங்கள், போராட்ட இயக்கங்கள் ஆகியவற்றை நடத்துகிற முறையில் அமைதியையும், அற வழியையும், தாம் துன்பத்தை ஏற்றுக்கொண்டு, பிறருக்குத் துன்பம் தராத உள்ளப் பண்பையும் மேற்கொள்வதில் காந்தியடிகளுக்கு இணையாக விளங்குகிறார்.

அண்ணாவின் எழுத்து: மனித உள்ளத்தைப் பண்படுத்தும்.

அண்ணாவின் பேச்சு: மனிதனை மனிதனாக்கும்.

அண்ணாவின் சிந்தனை: நாட்டின் நலிவைப் போக்கும்.

அண்ணா சிரிப்பார்: தம்மை இழிவுபடுத்துபவர்களைப் பார்த்து.

அண்ணா கண்ணீர் சிந்துவார்: எதிரிகளே யானாலும் கூட அவர்களுக்கு ஏற்படும் துன்பத்தைக் காணச் சகிக்காமல்.

அண்ணா வெகுண்டெழுவார்: பிறர் ஜாதி பேதத்தை வியாபாரமாக்கும்போது.

அண்ணா தொல்லைப்படுவார்: மக்களுக்கு அரசியல் விழிப்பு ஏற்படுவதற்காக!

அண்ணா நடிப்பார்: சமூகத்தின் சீரழிவைப் போக்குவதற்காக.

இவற்றாலேயே இந்தியத் துணைக் கண்டத்தை ஆள்கிற காங்கிரஸ் இயக்கத்துக்குச் சமாளிக்க முடியாத ஒரு பிரச்னையாக—சக்தி வாய்ந்த இயக்கமாக—அண்ணா அவர்கள் திகழ்கிறார்கள்.

இவர் ஒரு புதிய சமுதாயத்தின் சிற்பி.

திறமை, தந்திரம், கண்டிப்பு இவற்றையெல்லாம் கடந்த பாச உணர்வுத் தீ கொழுந்து விட்டு எரிய அந்தப் பண்புச் சுடர் ஒளி வீசுகின்ற மனித குலத்தின் தத்துவவாதி.

பழைமையையும் புதுமையையும் இணைத்து, பாசத்தின் அடிப்படையில் ஜாதி பேதம் போன்றவைகளை ஒழித்து, மனித இனத்தை ஒன்றாக்கும் அரசியல் ஞானி.

விஞ்ஞானத்தில் மெய்ஞ்ஞானத்தைக் கலந்து, வாழ்க்கையில் வளம் பெருகச் செய்து, 'அன்பு' என்னும் அகன்று விரிந்த சமதர்மக் கோட்பாட்டின் செந்நெறிகளைச் செயற்படுத்தும் இலட்சியத்தை மேற்கொண்டு, புதிய சமுதாயத்தைத் தோற்றுவிக்கும் வழிகாட்டி.

இவர்தான் அண்ணா!

## "தலைப்பில்லை!"



சென்னை கல்லூரி ஒன்றில் ஒரு முறை அண்ணா பேச எழுந்தபோது, என்ன பேச வேண்டும் என்று கேட்டார். 'தலைப்பில்லை' என்றார்கள்.

உடனே 'தலைப்பில்லை' என்ற தலைப்பில் பேசத் தொடங்கினார்!

இன்னொரு சமயம் கோகலே ஹாலில் கல்லூரிகள் தமிழ்ப் பேரவை சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் பேசிய திருமதி சௌந்தரம் கைலாசம், திரு டி. கே. ஷண்முகம் முதலியோர் தமிழின் சிறப்பைப் பற்றியும், இனிமையைப் பற்றியும் எடுத்துரைத்தனர். இறுதியில் பேசிய அண்ணாவுக்குத் தலைப்புத் தரப்படவில்லை.

ஆகவே அண்ணா, ''முன்னால் பேசியவர்கள் தமிழின் மாண்பினையும் சிறப்பையும் எடுத்துரைத்தார்கள். இதற்கு முடிவு கூற வேண்டும் என்றால், 'ஆனால்' என்றுதான் தொடங்க வேண்டும் என்று கூறி ''ஆனால்'' என்ற தலைப்பில் பேசினார்கள்!

— எஸ். குமாரராஜ்

# வலிதான் எங்கள் பிரச்சினை...

## உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

**ஆராய்ச்சி:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை வகிப்பவன் நான். எங்களுடைய பணி வலியை நிறுத்த மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களுள் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' பார்முலா தான் என்பதை நாங்கள் இன்று அறிவோம்.

சமீபத்தில், அமெரிக்க அரசாங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற சோதனைகள் 'ஆஸ்ப்ரோ' விலுள்ள சுறுசுறுப்பாக இயங்கும் கூட்டுப் பொருள்தான், மிகவும் துரிதமான மற்றும் பயனுள்ள வலிநிவாரணி என்று தெளிவாக நிரூபித்துள்ளன. அதனால்தான் அது உலக முழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது.

**வலி என்பது என்ன?** உயிர்ப்பொருள், உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு ''மறைமுகமான'' வீக்கத்திற்குக் காரணமாகிவிட, அது நரம்புகளை அழுத்துவதின் மூலம் வலி ஏற்படுகிறது.

**'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி?** 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

**இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** வலி • தலை வலி • உடல் வலி • பல் வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன் கூடிய அஸந்தோஷம் • ஃப்ளு • டெங்கு.




அளவு:
பெரியவர்கள்: இரண்டு மாத்திரைகள், தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொல்படி.

A.G.36,66 TAM

# 'ஆஸ்ப்ரோ' வலியை வெளியே இழுத்துவிடுகிறது!

அதிசூரனும் பிள்ளைகட்கு வாட்பயிற்சி அளித்து வந்தான். அவன் வாட்படை பயிற்றும் தொழில் உரிமைத் தாயத்தினன்; தற்பெருமை பூண்டவன்; ஆணவத்தின் ஆணி வேர்; வாள் பயிற்சி தருவதில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்று தருக்குக் கொண்டிருந்தவன். ஏனாதி நாயனாரின் சிறப்புக் காரணமாக அவன் அத்தொழிலில் பிரகாசிக்க முடியவில்லை. அழுக்காறு, அவா, சினம் இன்னாச்சொல் ஆகிய தீய குணங்களைக் கொண்டிருந்தான். வர வர அவனது ஊதியம் குறைந்து கொண்டே வந்தது. அதனால் ஏனாதிநாத நாயனார் மீது பகைமை பாராட்டினான்.




பொறாமையினால் அலைப்புண்ட அதிசூரன் தன் துணைவர்களுடன் ஆராய்ந்தான். ஏனாதிநாத நாயனாரை எதிர்த்துப் போர் செய்து அவருடைய தொழில் உரிமையைக் கவர வேண்டும் என்று எண்ணினான். தன்னிடம் வாட்பயிற்சி பெற்றவர்களையும், சுற்றத்தினரையும், துணைவர்களையும் அழைத்துக் கொண்டு ஒரு நாள் ஏனாதிநாத நாயனாரிடம் சென்றான். ''வாட்படைப் பயிற்சி தருகின்ற குலத்தாயத் தொழில் உரிமையை வலியவரே பெற வேண்டும். ஆதலால் நீயும் நானும் போர் செய்வோம். போரில் வெற்றி பெறுபவர்க்கே அத்தொழில் உரியது. போர் செய்ய வருக'' என்று அழைத்தான்.

வெங்கண் புலிகிடந்த
　　வெம்முழையில் சென்றழைக்கும்
பைங்கண் குறுநரியே
　　போல்வான் படைகொண்டு
பொங்கிப் புறஞ்சூழ்ந்து
　　போர்குறித்து நேர்நின்றே
அங்கண் கடைநின்
　　றழைத்தான் ஒலிகேளா.

வேங்கைப் புலி கிடந்த குகையின் முன் சென்று போருக்கு வா என்று குறுநரி அழைத்தது போலிருந்ததாம்!

அதிசூரன் போருக்கு அறைகூவி அழைத்ததைக் கேட்ட ஏனாதி நாத நாயனார் ராஜ சிங்கம் போல் கிளர்ந்தெழுந்தார். ''ஆர் கொலோ போருக்கு அழைத்தவர்'' என்று சீறினார். ஆடைவரிந்து கச்சை கட்டினார். வீரக் கழல் அணிந்தார்; கூர்மையான வாளாயுதத்தையும், பலகையையும் கொண்டு போருக்குப் புறப்பட்டார். ஒருபுறத்தில் ஏனாதி நாயனார்; மற்றொரு புறத்தில் வெள்ளம் போல் அதிசூரனுடன் வந்துள்ள வீரர்கள். அப்பகைவர்கள் மீது தனித்துப் போருக்குச் சென்றார் நாயனார். அவரது வீரத்தை யாரே அளக்க வல்லார்? ஏனாதிநாத நாயனார் தனியே போருக்குச் செல்வதை, முன்னர் இவரிடம் பயிற்சி பெற்றவர்கள் அறிந்ததும் ஓடோடி வந்தனர்; ஏனைய சுற்றத்தினரும் ஓடிவந்து சூழ்ந்து நாயனாருக்குத் துணை புரிந்தனர்.

அதிசூரன் நாயனாரை நோக்கி, ''வெளியிடத்தில் நாம் போர் செய்து நம்மில் வெற்றி பெறுபவர் வாட்படைப் பயிற்றும் ஆசிரியத் தொழில் உரிமையைக் கொள்ள வேண்டும்'' எனக் கூறினான்.

''உனக்கு அது நன்று என்று தோன்றினால் நான் அதற்கு இசைகிறேன்'' என்றார் நாயனார்.

அணிவகுத்து நின்று இரு திறத்துச் சேனைகளும் கைகலந்து போர் செய்யத் தொடங்கின. மேகத்துடன் மின்னல் கலந்து இடிப்பது போல், சேனைகளுக்கிடையே வாள் மின்னப் பேரொலி உண்டாகியது. வாள் வீரர் வாள் வீரருடனும், வேல் வீரர் வேல் வீரருடனும், வில் வீரர் வில் வீரருடனும்

கடுஞ்சமர் புரிந்தனர். தோள் தட்டும் ஒலியும், வில்லின் நாண் ஒலியும் கடல் ஒலி நாண எழுந்தன. போரைக் கண்டவர் கண்கள் கூசின; மண்ணும் விண்ணும் சுழன்றன. போர் செய்தவர் கரங்கள் அறுபட்டன. சிரங்கள் உருண்டன; சரங்கள் துணிபட்டன; தாள்களும், தோள்களும் சிந்தின.

குருதியின் நதிகள் பரந்தன;
குறையுடல் ஓடி அலைந்தன;
பொருபடை அறுதுணி சிந்தின;
புடைசொரி குடர்உடல் பம்பின;
வெருவர எருவை நெருங்கின;
விசியறு துடிகள் புரண்டன;
இருபடை தனினும் எதிர்ந்தவர்
எதிரெதிர் அமர்செய் பறந்தலை.

உதிர ஆறு ஓடியது; குறையுடல்கள் கூத்தாடின; தலைகள் உருண்டன; பிண மலை குவிந்தது; காகங்களும் கழுகுகளும் அவற்றை வட்டமிட்டன.

இருபுறத்துச் சேனைகளும் இவ்வாறு மாண்டன. மாளாது நின்ற தமது படைகளைப் பின்னே போகச் செய்து போர் முனையின் முன்னே வந்து நின்றார் ஏனாதிநாத நாயனார். வீர சிங்கம் போல் வந்து நின்ற அவர், கறங்கு போல் சுழன்று எதிரிகளின் தோள்களையும் தாள்களையும் துணித்தார்.

தலைப்பட்டார் எல்லாரும்
தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார்; முட்டாதார்
கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு
நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற்
குற்றம்போ லாயினர்.

போரில் தலைப்பட்ட பகைவர் யாவரும் கொலைப்பட்டனர். போரில் கலந்து கொள்ளாமல் நின்றவர்கள், வெற்றிகரமாகப் பின்வாங்கி விட்டார்கள். இதனைச் சேக்கிழார் பெருமான் சொல்லும் அழகே அழகு. மெய்யுணர்வு வந்தவுடன் உள்ளத்தில் உள்ள ஆசாபாசங்கள் மறைவது போல் ஓடி மறைந்தார்களாம். இவ்வாறு ஓடியவர்களை எல்லாம் ஊக்குவித்து அழைத்து வந்து நாயனார் முன் சென்று அடர்த்தான் அதிசூரன். நாயனார் மிகுந்த வேகத்துடன் வாளைச் சுழற்றி, அதிசூரனைக் கொல்ல வந்தார். அதனால் அச்சம் கொண்ட அதிசூரன் புறங் கொடுத்து ஓடினான். வெற்றி பெற்ற நாயனார், கற்றைவார் சடைப் பரமனைப் போற்றித் தமது திருமாளிகையை அடைந்தார்.

புறங் கொடுத்து ஓடிய அதிசூரன் மிகுந்த அவமானமடைந்தான். தோல்வியை நினைந்து உள்ளம் உலைந்தான். இரவு தூக்கமே வரவில்லை. கண் மூடாமல் கவலையடைந்தான். கடைசியாக நாயனாரை வஞ்சனையால் வெல்ல வேண்டும் என்று முடிவு செய்தான்.

**பொ**ழுது விடிந்தது.

தீயவனான அதிசூரன் ஏனாதிநாத நாயனாரிடம் ஓர் ஆள் மூலம், ''நீயும் நானும் தனி இடத்தில் போர் செய்யலாம். நம்பொருட்டு மற்றவர்கள் வீணாக மாள வேண்டாம்'' என்று சொல்லி அனுப்பினான்.

நாயனார், ''அதுவும் சரி'' என்று பதில் கூறினார்.

சுற்றத்தாருக்கும், மாணவர்களுக்கும் தெரியாமல் வாளும் பலகையும் தாங்கிப் புறப்பட்டார். அதிசூரன் குறித்த இடத்துக்குச் சென்று அவனது வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.



''இருநீறு அணிந்தாரை எவ்விடத்தும் எப்போதும் நாயனார் தீங்கு செய்யார்'' என்பதை அறிந்தான் வஞ்சனையே மேற்கொண்ட அதிசூரன். ஒருபோதும் திருநீறு அணியாத அப் பாதகன் நெற்றி நிறைய நீறணிந்தான்; வாளும் பலகையும் தாங்கிப் புண்ணியப் போர் வீரரை வா வென்று



# ELECTRIC MOTORS

**STURDY - SAFE - DEPENDABLE**

***RANGE INCLUDES***

**INDUCTION MOTORS** Squirrel Cage both Screen Protected and Totally Enclosed Fan Cooled types as well as Slipring type for use on 400/440 v. Capacities up to 20 b.h.p.

Manufacturing programme includes production of Squirrel Cage & Slipring types up to 200 h.p.

**LOOM MOTORS** Totally Enclosed 3 phase for outputs from 0.50 h.p. to 1 h.p.

**CARD MOTORS** Totally Enclosed, High Torque 400/440 v. 3 phase, 50 cycles a.c., 1.5 h.p. to 2 h.p.

**RING - FRAME DRIVE MOTORS** Squirrel Cage, Totally Enclosed Fan Cooled type, 10 h.p. & 12.5 h.p.



INDUCTION MOTOR

LOOM MOTOR



*MANUFACTURERS*

**ELECTRIC CONSTRUCTION & EQUIPMENT CO. LTD.**

9, KALIPRASANNA SINGHEE ROAD, CALCUTTA-2

PARBANGLA (24 PARGANAS) - BOMBAY - DELHI - MADRAS - HYDERABAD - VISAKHAPATNAM
BANGALORE - PATIALA - JABALPUR - PATNA - JAIPUR - KANPUR

சொன்ன இடத்துக்குச் சென்ருன். அங்கே இரைக்குரிய பிராணியை எதிர்பார்த்து நிற்கும் சிங்கம் போல் நின்றிருந்த நாயனுரைக் கண்டதும், நீறணிந்த நெற்றியைப் பலகையால் மூடிக் கொண்டான். நாயனுர் அவனைக் கொல்ல வாளுடன் சென்ருர். அத் தருணத்தில் நீறணிந்த நெற்றியை மறைத்திருந்த பலகையை விலக்கினுன் அதிசூரன். நெற்றியில் வெண்ணீற்றைக் கண்டார் நாயனுர்.

**கண்டபொழு தேகெட்டேன்!**
**முன்பிவர்மேற் காணுத**
**வெண்திருநீற் றின்பொலிவு**
**மேற்கண்டேன்; வேறினிஎன்?**
**அண்டர்பிரான் சீரடியார்**
**ஆயினுர்' என்றுமனங்**
**கொண்(டு) 'இவர்தங்**
**கொள்கைக் குறிவழிநிற் பேன்'**
**என்று.**

அதிசூரன் நெற்றியில் திருநீற்றைக் கண்ட நாயனுர் திடுக்கிட்டார் 'ஆ! கெட்டுவிட்டேன். இத்தனை நாளாக ஒரு போதும் காணுத திருநீற்றினை இவர் நெற்றியின்கண் காண்கிறேன். இவரைப் பற்றி வேறு மாருக நினைப்பதற்கு என்ன இருக்கிறது? இவர் சிவபெருமானுடைய திருத் தொண்டராக ஆயினுர் போலும்! எம்பெருமான் அடியவரை நான் எதிர்க்கலாமா? ஆகவே, இவருடன் இனிப் போர் செய்வது பிழை. இனி இவருடைய குறிப்பின் வழியே நிற்பேன்' என்று திருவுளங் கொண்டார்.

**கைவா ளுடன்பலகை**
**நீக்கக் கருதியது**
**செய்யார் ''நிராயுதரைக்**
**கொன்ருர் எனுந்தீமை**
**எய்தாமை வேண்டும்**
**இவர்க்''கென் றிரும்பலகை**
**நெய்வா ளுடன் அடர்த்து**
**நேர்வார்போல் நேர்நின்ருர்.**

தமது கைவாளையும் பலகையையும் நீக்கி, அதிசூரன் கொலை செய்தாலும் அதை ஏற்க வேண்டும் என்று கருதினுராம் நாயனுர். அதற்குள் அவருக்கு வேருேர் எண்ணம் தோன்றிவிட்டது. தாம் வாளையும் பலகையையும் எறிந்து விட்ட நிலையில் அவன் தம்மைக் கொன்ருல், ''நிராயுதனைக் கொன்ருன்''- என்ற அபகீர்த்தி அவனுக்கு வந்து விடுமே'' என்று அஞ்சினுராம். அந்த எண்ணம்தான் அவரை நாயனுராக்கியது. அந்த எண்ணம் கொண்ட அவர், ஆயுதம் தாங்கிய போதிலும் செயலின்றி வெறுமையாக நின்ருர். என்னே இவரது திருநீற்றின் அன்பு? சிவனடியார்க்குப் பழி பாவம் வரக் கூடாது என்று கருதிய அவருடைய நினைவுள்ளத்தின் அருமையை யாரே அறிய வல்லார்?

வஞ்சனை மேற்கொண்ட பாதகனுன அதிசூரன் தான் நினைத்து வந்த கருத்தை முற்றுவித்தான்.

**அந்நின்ற தொண்டர்**
**திருவுள்ளம் ஆரறிவார்?**
**முன்னின்ற பாதகனும்**
**தன்கருத்தே முற்றுவித்தான்**
**இந்நின்ற தன்மை**
**அறிவார் அவர்க்கருள**
**மின்னின்ற செஞ்சடையார்**
**தாமே வெளி நின்ருர்.**

ஏனுதிநாத நாயனுரின் திருநீற்று அன்பை நன்கு அறிந்த மின்னுர் சடையுடை விடையவர் அருள்வெளியிலே தோன்றிக் காட்சியளித்தார். எம்பெருமான் அடியார்க்கும் அருள் புரியும் தன்மையை நாம் எவ்வாறு போற்றுவது? இறைவர் பல வழிகளில் பாசத்தை நீக்குவார். இங்கே பகைவரின் வாளினுல் பாசத்தை யறுத்துக் கொண்டார். திருநீற்றின்பால் வைத்த அன்பின் மிகுதியினுல் உயிரையே தியாகம் புரிந்தார் நாயனுர். பாசத்தை யறுத்துச் சிவபெருமான் நாயனுரை என்றும் தம்மை விட்டு நீங்காது உடன் இருக்குமாறு அருள் புரிந்தார்.

**மற்றினிநாம் போற்றுவதென்?**
**வானேர் பிரானருளைப்**
**பற்றலர்தம் கைவாளால்**
**பாசம் அறுத்தருளி**
**உற்றவரை என்றும்**
**உடன் பிரியார் அன்பருளிப்**
**பொற்றெடியாள் பாகனுர்**
**பொன்னம் பலம்அணைந்தார்.**

நாயனுரைக் கொன்ற பாபத்தினுல் அதிசூரன் மீளா நரகத்துக்கு ஆளாயினுன். அவன் பூசிய விபூதியினுல் புனிதனுகவில்லை. திருநீறு, உருத்திராக்கமணிந்துகொண்டு தீவினை புரிவோர் பெருந் துன்பமும், நரகமுமே எய்துவர் என்பது இதனுல் உணர்த்தப் படுகிறது. மெய்ப்பொருள் நாயனுரையும் ஏனுதிநாத நாயனுரையும் எதிர்த்த முத்திநாதனும் அதிசூரனும் அவர்களுடைய உடம்பை அழித்தனரேயன்றிக் கருத்தை யழிக்க முடியவில்லை. வெற்றி என்பது கருத்தில்தான் அடங்கி நிற்கின்றது.

(தொடரும்)

# வெற்றித் திருநகர்

**அகிலன்**

## அத்தியாயம் இருபத்துநான்கு

## கடைசி நம்பிக்கை

லட்சுமியின் ஓலையைப் படித்து விட்டுத் தஞ்சையில் விசுவநாதன் மயங்கிக்கிடந்த அதே வேளையில், லட்சுமியும் அவள் அன்னையின் மடியில் மயங்கித் தான் கிடந்தாள். அவர்களைச் சுமந்து சென்ற ரதம் அப்போது தென் பாண்டி நாட்டின் திருக்குற்றாலத்தைக் கடந்து, சேர நாட்டின் மலைக் காடுகளுக்குள் நுழைந்து கொண்டிருந்தது. ரதத்துக்கு முன்னும் பின்னும் காவலர்கள் குதிரைகளில் விரைந்து கொண்டிருந்தார்கள்.

பாண்டிய நாட்டை அது கடந்து விசுவநாதனின் வீரர்களுக்குத் தப்பிச் செல்ல வேண்டியிருந்ததால், லட்சுமியை அளவுக்கு மீறிய பாதுகாப்போடு தான் அனுப்பியிருந்தார் சாளுவ நரசிம்மர். குறுக்கு வழிகளையும் சுற்று வழிகளையும் பயன்படுத்திக் கொண்டு எப்படியோ ரதம் மதுரையை முதலில் தாண்டி வந்து விட்டது.

அடுத்தாற்போல் தென்பாண்டி நாட்டைக் கடப்பதில் அவ்வளவு சிரமம் ஏற்படவில்லை. உதயமார்த்தாண்டன் சேரநாட்டிலிருந்து முன்னதாக அனுப்பி வைத்த படைத் தலைவர்கள் திருவல்லப பாண்டியனின் தென்பாண்டி நாட்டைக் கைப்பற்றிக் கொண்டிருந்தார்கள். லட்சுமியின் ரதத்துக்குக் காவலாகச் சாளுவரின் வீரர்களோடு சேரநாட்டு வீரர்களும் சென்றதால் தென்பாண்டிய நாட்டை அது அச்சமின்றியே கடந்து சென்றது.

ரதத்துக்குப் பின்னால் சாளுவரும் தம் படை வீரர்களோடு பாண்டிய நாட்டை அங்கங்கே ஊடுருவிக் கொண்டு வந்தார். தென்பாண்டி நாட்டுக்கு வந்து உதயமார்த்தாண்டனின் படைகளோடு தம்முடைய படைகளையும் சேர்த்துவிட வேண்டுமென்பது அவர் திட்டம்.

லட்சுமியின் ரதம் சேரனின் தலைநகரான கொல்லத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. காட்டு மலைப் பாதையில் வளைந்து வளைந்து செல்ல வேண்டியிருந்தாலும் அதன் வேகம் குறையவில்லை. பாதையின் ஒருபுறம் செங்குத்தான மலைகளும் மறுபுறம் பயங்கரமான பள்ளத்தாக்குகளும் அடிக்கடி குறுக்கிட்டன. சிற்றருவிகள் சீற்றத்துடன் பாய்ந்தோடி வந்து பாதையை அறுத்துக் கொண்டு மறுபுறம் இழிந்தோடின.

அன்னையின் மடியில் சுருண்டு கிடந்த லட்சுமிக்கு இரவு, பகல், காடு, மலை எல்லாமே ஒன்று போல் தோன்றின. கண்களில் சுரக்கக் கூடிய கடைசிச் சொட்டு நீரையும் அவள் முன்னதாகவே கொட்டித் தீர்த்து விட்டதால், இப்போது அவளுக்கு அழுது புலம்பக்கூடத் திறனில்லை.

"அம்மா !" என்று தன் தாயை அழைத்தாள் லட்சுமி. அன்னை கனிவோடு அவளைத் திரும்பிப் பார்த்தார்.

"அப்பா இவ்வளவு கொடியவர் என்று நான் நினைக்கவேயில்லையம்மா ! அவர் இவ்வளவு கொடுமை செய்தும் நான் ஏன் வழியில் விழுந்து மடியாமல் இன்னும் உயிரோடிருக்கிறேன், தெரியுமா?"

கோசலம்மாளின் மனம் அவர் கணவருக்கும் குமாரத்திக்கும் இடையில் கிடந்து தவித்துக் கொண்டிருந்தது. அவரால் தம் கணவரைச் சிறிதும் வெறுக்க முடியவில்லை. அதே சமயம் லட்சுமியின் துயர் கண்டு அழாமலும் அவரால் இருக்க முடியவில்லை. அவர் அழுதார்.

"நான் ஏன் இன்னும் உயிர் விடாமல் இருக்கிறேன், தெரியுமா? இளவரசரை எப்படியாவது ஒரு முறை நேரில் பார்த்து அவரிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்று என் மனம் துடிக்கிறது. அவர் எப்போது அழைத்தாலும் நான் அவரோடு புறப்பட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அவர் அப்படிக் கேட்பதற்கு இடம் வைக்காமல் அப்போதே அவரோடு நான் தஞ்சையிலிருந்து இரகசியமாகப் புறப்பட்டிருக்கவேண்டும். அப்படித்தான் புறப்படத் துணிவில்லையென்றால், அவர் கேட்டபோதாவது நான் வருவதாக வாக்களித்திருக்க வேண்டும். நான் அவருக்கு நம்பிக்கையளித்திருந்தால், எப்படியும் என்னை அவர் தேடி வந்திருப்பார். நான் எங்கிருந்தாலும் என்னை விட்டுவிட மாட்டார். இப்போதோ அவர் கரம் நீட்டியபோது நான் மறுத்ததால், என்னையும் துரோகி என்றே நினைத்திருப்பார்......."

லட்சுமியின் அன்னை இதே சொற்களை நூறாவது முறையாகத் தம் குமாரத்தியிடமிருந்து கேட்டு விட்டார். திடீரென்று விசுவநாதன் எதிரில் குறுக்கிட்டு லட்சுமியைக் கவர்ந்து செல்லக் கூடுமானால் அதனும்

அவருக்குமே ஆறுதல் ஏற்பட்டிருக்கும். ஆனால் அப்படி ஏதும் நிகழவில்லை.

''அம்மா! அப்பா தம்முடைய அதிகார வெறிக்கு என்னைப் பலியாக்கி விட்டாரம்மா; அரசியல் சூதாட்டத்துக்குத் தாம் பெற்றெடுத்த மகளையே பணயம்வைக்கத் துணிந்து விட்டாரம்மா! நான் முற்பிறவியில் செய்த பாவத்தால் இவருக்குப் பெண்ணாகப் பிறந்து விட்டேன்; சாம்ராஜ்யத்தைக் கட்டியாளப் போகிறாராம், சாம்ராஜ்யத்தை!''

சட்டென்று லட்சுமியின் வாயைப் பொத்தி, ''இனி உன் அப்பாவைப் பற்றி என்னிடம் குறை கூறினால், நான் உன்னோடு பேச மாட்டேன்!'' என்றார் கேசவம்மாள்.

''என்னுடைய அப்பாவா அவர்?'' என்று வெறுப்போடு கேட்டுவிட்டு, ''என்னைச் சிறையெடுத்துக் கொண்டு போய்ச் சேரனுக்குத் தானம் செய்யத் துணிந்தவரை இனி இந்தப் பிறவியில் நான் அப்பா என்றே நினைக்க மாட்டேன்!'' என்று கத்தினாள்.

மலையின் உச்சியில் ரதம் நின்று கொண்டிருந்த போது திடீரென்று கடிவாளங்களைப் பற்றி இழுத்துக் குதிரைகளை நிறுத்தினான் ரதசாரதி. காவல் வீரர்களின் குதிரைகளும் சட்டென நின்றன.

''அரசர் வருகிறார்! உதயமார்த்தாண்ட வர்மர் வருகிறார்!'' என்று காவலர்கள் வியப்போடு பேசிக் கொண்டது லட்சுமிக்குக் கேட்டது.

லட்சுமி அச்சத்தோடு திரையை விலக்கிக் கொண்டு எட்டிப் பார்த்தாள். அவள் கண்ட காட்சி அவள் தலையைச் சுற்ற வைத்தது. வளைந்து வளைந்து வரும் மலைப் பாதையெங்கும் ஒரே யானைகளின் கூட்டமாகவும் குதிரைகளின் கூட்டமாகவும் தெரிந்தது. சேரன் தனியே வரவில்லை; தன் படை பலம் முழுதும் திரட்டிக் கொண்டு, பயங்கரமான பேரொலி முழக்கங்களோடு வந்து கொண்டிருந்தான்.

சேர நாட்டுக் காடுகளில் திரிந்த அவ்வளவு யானைகளையும் பிடித்துப் போர் யானைகளாய்ப் பழக்கியவன் போல், அரபு நாட்டுக் குதிரைகள் அனைத்தையுமே விலைகொடுத்து வாங்கியவன்போல், சேரநாட்டுக் கட்டிளம் காளையர் அனைவரையுமே ஒன்று திரட்டியவன் போல், அவன் தன் படைக் கடலில் பட்டத்து யானையான படகில் மிதந்து செருக்கோடு வந்து கொண்டிருந்தான். அப்படி ஒரு பயங்கரமான போர்க்கோலக் காட்சியை விஜநகரத்தில்கூட லட்சுமி அதற்கு முன்பு கண்டதில்லை.

லட்சுமியின் அடிவயிற்றில் தீப்பற்றி எரிவது போல் ஒரு வேதனை ஏற்பட்டது. 'இளவரசரையும் அவருடைய பாண்டிய நாட்டையும் தகர்த்து அழிப்பதற்குப் புறப்படும் படைதானே இது? அவர் வீராதி வீரராக இருந்தாலும் கடலெனப் பொங்கி வரும் இந்தப் பெரும் படைகளுக்கு முன்னால் அவர் என்ன செய்ய முடியும்? அப்பாவின் படைகளும் சேரனின் படைகளும் ஒன்றுசேர்ந்து தாக்கும் போது அவர் எவ்வாறு உயிரோடு மீள முடியும்?'

''அம்மா! எனக்குத் தலை சுற்றுகிறது. ஒருவேளை சேரநாட்டரசர் எதிர்ப்பட்டு, என்னிடம் பேச விரும்பினால் நான் பேசும் நிலையில் இல்லை என்று கூறி விடுங்கள். பிரயாணம் என்னைப் பாதித்து விட்டது என்று சொல்லுங்கள்'' என்று தம் அன்னையாரிடம் கேட்டுக் கொண்டாள் லட்சுமி.

ரதம் மேலே சென்றது. லட்சுமி அஞ்சி நடுங்கிக் கொண்டிருந்த அந்த வேளை வந்தது. சேரனின் யானை ரதத்துக்கு முன்னால் நின்று பயங்கரமாகப் பிளிறித் தன் வாழ்த்துதலை லட்சுமிக்கு அறிவித்தது.

யானை மீதிருந்து குதித்து உற்சாகமாக ரதத்தை நோக்கி ஓடி வந்தான் உதயமார்த்தாண்டன். திரைத் துகிலை விலக்கிக் கொண்டு ரதத்துக்குள் நுழைந்தான். லட்சுமி மயங்கிக் கிடந்த கோலம் அவனைத் திடுக்கிட வைத்தது.

''நீண்ட பிரயாணத்தை லட்சுமியால் தாங்க முடியவில்லை. அடிக்கடி மயக்கம் வந்து நினைவிழந்து விடுகிறாள்'' என்றார் கேசவம்மாள்.

உடனே தன் மருத்துவரை அழைத்து வரும்படி ஆணையிட்டு விட்டு, லட்சுமியின் அருகில் வந்து அவளை விழுங்கி விடுவது போல் உற்றுப் பார்த்தான் உதயமார்த்தாண்டன். அவளுடைய அழகு மயக்கம் அவன் தலைக்கேறியது.

''இளவரசியார் நினைவோடிருந்தால் அவர்களுக்கு என் படைவீரர்களைக் காட்டி மகிழ்ந்திருப்பேன். விஜயநகரத்து இராமநவமித் திருவிழாவில் விசுவநாதன் என்னிடம் வெற்றி பெற்றது போல் இனி வெற்றி பெற முடியாது. எப்படியும் போரில் வெற்றிவாகை சூடிக் கொண்டு வந்து இவர்களுக்கு மாலை சூடத்தான் போகிறேன்!'' என்றான் உதயமார்த்தாண்டன்.

கண் மூடிக் கிடந்த லட்சுமியின் இதயம் வெகுவேகமாக அடித்துக் கொண்டது. பிறகு அது திடீரென்று நின்று விடும்போலிருந்தது.

உதயமார்த்தாண்டன் மேலும் தொடர்ந்து பேசினான் :

''அமைச்சர் என்னுடைய வீரத்தைப் பரிசோதிப்பதற்காகவே இந்தப் போரை நடத்துகிறாராம். போரில் நான் வெற்றி பெற்றாலே இளவரசியாரை எனக்கு மணம் முடித்துக் கொடுப்பதாகவும், அப்படி இல்லாமல் விசுவநாதன் வெற்றி பெற்றால் அவனுக்கே கொடுப்பதாகவும் கூறியிருக்கிறார். அவர் கூறிய இட்டத்துக்குக் கட்டுப்பட்டே இந்தப் போரில் வெற்றி பெறுவதாகச் சபதம் செய்திருக்கிறேன். வெற்றி பெற்றால் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தோடு இளவரசியாரும் எனக்கு வெற்றி மாலை சூடுவாரல்லவா...?''

லட்சுமியின் உள்ளத்தில் மின்னலைப் போல் ஒரு நம்பிக்கைக் கீற்று சுடரொளி விட்டது. 'அப்படியானால் என் இளவரசர் வெற்றி பெற்றால், அவருக்கே என்னை மணம் முடித்துக் கொடுக்க இசைந்திருக்கிறாரா அப்பா? அவர் வெற்றி பெற்றால் அவர் கழுத்தில் நான் வெற்றிவாகையாகத் திகழ முடியுமா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டாள்.

IOC-123 TM



# குறையிலேயே
# கண் என்பது
# உண்மையே

ஆனால் தரக்குறைவான மாற்றுப் பொருளை ஏற்க மறுத்து, குறிப்பிட்ட மூலப்பொருளே வேண்டுமென வற்புறுத்த நேரும் போதுதான் அப்படிச் செய்கிறோம்.

இல்லையேல், நிர்ணயித்த வகைகளில் இல்லாத எங்கள் தொழிற்சாலைகளின் தயாரிப்புகளையே நிராகரிக்க வேண்டிவரும் போதும் அவ்விதம் செய்கிறோம்.

அல்லது, தரச்சீர்பாட்டுக்குத் தடையாகவுள்ள பழைய வழிகளில் ஈடுபடுவதை விடுத்து, எங்கள் பண்டங்களையும் செய்முறைகளையும் புதிய வகைகளில் பயன்படுத்தும்படி தொழில் துறையினருக்கு ஆலோசனை கூறுவது அவசியமாகும் சமயங்களில் அம்மாதிரிச் செய்கிறோம்.

இன்றேல், எங்கள் தயாரிப்புகளின் இறுதித்தரத்தில் எங்களுக்கே ஐயம் எழும்போது அவ்வாறு செய்கிறோம்—இத்தகைய தரப்பரிசோதனையே இடையறாது நடந்து வருகிறது. ஆம், குற்றம் காண்பதில் எங்களுக்குக் குறிதான்...என், ஒரு விதமான வெறி என்று கூடக் கூறலாம்.

இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட் IOL

அவளுடைய கண்கள் இலேசாகத் திறந்து இந்தச் செய்தியை அவன் கூறியதற்காக அவனுக்கு நன்றி செலுத்தின.

உதயமார்த்தாண்டன் அந்த விழிகளைக் கண்டு தன்னையே மறந்து விட்டான். ஏதேதோ மகிழ்ச்சிப் பெருக்கால் பிதற்றி விட்டு, ''கொல்லம் நகரத்து மாளிகையில் உங்களுக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறேன்!'' என்றான்.

லட்சுமியின் செவிகளில் வேறு எந்தச் சொற்களுமே விழவில்லை. 'போரில் நான் வெற்றி பெற்றாலே இளவரசியாரை எனக்கு மணம் முடித்துக் கொடுப்பதாகவும், அப்படியில்லாமல் விசுவநாதன் வெற்றி பெற்றால் அவனுக்கே கொடுப்பதாகவும் கூறியிருக்கிறார்' என்ற சொற்களே மீண்டும் மீண்டும் ஒலிக்கத் தொடங்கின.

நம்பிக்கை அடியோடு அழிந்துவிடவில்லை. அது மெல்ல மெல்ல அவளிடம் துளிர் விடத் தொடங்கியது. விசுவநாதன் வெற்றிபெற வேண்டுமென்று இராமபிரானை வேண்டிக் கொண்டாள் அவள்.

## அத்தியாயம் இருபத்தைந்து

# புதிய தலைவன்

**ம**துரை மாநகரம் பெரியதொரு பாசறையாக மாறிக் கொண்டிருந்தது. பாண்டிய நாட்டின் நாற்புறங்களிலிருந்தும் பாளையக்காரர்கள் பலர் தங்கள் படைகளோடு வந்து குவிந்தவண்ணம் இருந்தனர். கம்பத்துக்கு வாணாதிராயரை முறியடிக்கச் சென்றிருந்த ராமபத்திரநாயக்கரும் வெற்றியோடு திரும்பி விட்டார். விசுவநாதனின் ஆலோசனைப்படி முன்னதாகவே தென்பாண்டி நாட்டிலிருந்து பின்வாங்கிய திருவல்லப பாண்டியனும் அப்துலும், மதுரையிலிருந்தவாறே தங்கள் படைவீரர்களைப் போருக்குச் சித்தப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

தென்காசிப் பகுதியிலிருந்து திருநெல்வேலியை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த உதயமார்த்தாண்டனுடைய படைவீரர்களைப் பற்றி விசுவநாதனுக்குப் பயங்கரமான செய்திகள் வந்து கொண்டிருந்தன. சாளுவரும் தமது சோழ நாட்டுப் படைகளை மார்த்தாண்டனின் ஆணையில் விட்டு, ''எப்படியாவது மதுரைத் தலைநகரை இருந்த இடம் தெரியாமல் அழிக்க வேண்டும்!'' என்று அவனுக்குக் கட்டளையிட்டிருந்தாராம்.

சாளுவர் உதயமார்த்தாண்டனிடம் கூறியிருந்த மற்றோர் இரகசியச் செய்தியையும் எப்படியோ தெரிந்து கொண்டு, விசுவநாதனுக்கு ஓலை அனுப்பியிருந்தார் அரியநாத முதலியார். முதலியார் போருக்கான முன்னேற்பாடுகளைச் செய்துவிட்டு, லட்சுமியைத் தேடுவதற்காகத் தாமே வீரர்களுடன் தெற்கே சென்றிருந்தார். அவ்வப்போது அவரிடமிருந்து உதயமார்த்தாண்டனின் நடமாட்டங்களைப் பற்றிய செய்திகள் விசுவநாதனுக்கு வந்து கொண்டிருந்தன.

அவர் அனுப்பி வைத்த ஓலைகள் ஒன்றில் தான் அந்த இரகசியச் செய்தி அடங்கியிருந்தது. அவர் எழுதியிருந்தார்:

''சாளுவநரசிம்மர் உதயமார்த்தாண்டனுக்கு இளவரசியாரை மணம் முடித்துக் கொடுப்பதாக இன்னும் வாக்களிக்கவில்லையாம். இந்தப் போரில் அவன் வெற்றி பெற்றால் அவனுக்குக் கொடுப்பதென்றும், அப்படியில்லாமல் தாங்கள் வெற்றி பெற்றால் தங்களுக்கே கொடுப்பதென்றும் கூறியிருக்கிறாராம். அவனுடைய வெற்றிக்காகத் தான் அவர் கடைசி வரையில் போராடுவாரென்றாலும், அதையும் மீறித் தாங்கள் வென்று விட்டால், இளவரசியாரைத் தாங்கள் மணந்து கொள்ள அவர் தடையாக நிற்க மாட்டாரென்று தெரிகிறது. இதற்கிடையில் எப்படியும் நான் இளவரசியாரைச் சேர நாட்டிலிருந்து அழைத்து வருவதற்கான ஏற்பாடுகளைக் கவனிக்கிறேன். அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டுத் தாங்கள் முழுமூச்சோடு போர் நடவடிக்கைகளைக் கவனியுங்கள்.''

லட்சுமி அப்போதே அவனிடம் திரும்பி வந்து விட்டது போன்ற மன நிறைவை விசுவநாதனுக்கு அளித்தது அந்த ஓலை. முழுமூச்சோடு அவன் போர் நடவடிக்கைகளில் இறங்கலானான். அந்தப் போரின் வெற்றி அவனுடைய இலட்சியத்தின் வெற்றி மட்டுமல்ல; வாழ்க்கையின் வெற்றியும் அதில் இருந்தது.

பாளையக்காரர்களையும் படைத் தலைவர்களையும் திரட்டி வைத்து, போர் முரசு கொட்டுவதற்கு முன்பாக இலட்சிய முரசு கொட்டினான் விசுவநாதன்:

''இந்தப் போர் நம்முடைய புதிய இலட்சியத்துக்காக நடைபெறும் போர். பல மொழி பேசுவோர், பல்வேறு இனத்தினர், சமயத்தைச் சார்ந்தவர் இங்கு ஒற்றுமையோடு வாழ்ந்து இந்த மாபெரும் நாட்டையும் இதன் குடிமக்களையும் போர் வெறி கொண்ட அன்னியரிடமிருந்து காப்பாற்றப் போகிறோமா? அல்லது நமக்குள் பிரிந்து நின்று போரிட்டு அழியப் போகிறோமா? இதை முடிவு செய்யப் போகும் போர் இது.

''விஜயநகரத்து இலட்சியம் இந்தப் பரத கண்டம் முழுவதுமே ஒரு குடும்பம் போல் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்பதுதான் அந்த இலட்சியம் முழுவதும் நிறைவேறவில்லையென்றாலும், பரத கண்டத்தின் தென் பகுதி முழுவதையும் அது ஒரு குடும்பமாகச் செய்து விட்டது. விஜயநகரத்தின் அந்த இலட்சியம்தான் இன்று இந்தத் தென்னாட்டைப் பகைவர்களின் படையெடுப்புக்களிலிருந்தும் கொடுங்கோன்மையிலிருந்தும்— காத்திருக்கிறது. அன்னியர்களின் படை

வெடிப்புக்களால் பரத கண்டத்தின் வட பகுதி பட்டிருக்கும் சீர்கேடுகளை நினைத்துப் பாருங்கள். கொலைகள், கொள்ளைகள், சோரங்கள், கட்டாய மதமாற்றங்கள், அறநிலையங்களின் அழிவுகள் — இவ்வளவு கொடுமைகளும் இங்கே நிகழாமல் தடுத்தது எது ? — அந்த இலட்சியம்!

''ஒன்றுபட்டு வாழ்ந்ததால் நம்மை நாம் போர் வெறியர்களின் மிருகத்தனங்களிலிருந்து காத்துக் கொள்ள முடிந்தது. அதை மறந்துவிட்டுச் சாளுவரும் உதயமார்த்தாண்டனும் பிரிந்து வாழப் போர் முரசு கொட்டுகிறார்கள். அவர்களை நாம் இப்போதே ஒடுக்கா விட்டால், நம்முடைய உட்பகையைப் பயன்படுத்திக் கொண்டு, மீண்டும் அன்னியர் புகுந்து குமரி முதல் இமயம் வரை இரத்த வெள்ளம் பாய்ந்தோடச் செய்து விடுவார்கள். ஒன்றுபட்டால் வாழ்வு; பிளவுபட்டால் அழிவு: நாம் ஒன்றுபட்டு வாழ்வோம்!'

விசுவநாதன் போரில் மாவீரன் என்பதையும் சிறந்த இராஜதந்திரி என்பதையும் பரந்து விரிந்த மனம் கொண்டவன் என்பதையும் பாளையக்காரர்கள் முன்பே அறிந்திருந்தார்கள். அவனது வருகையை அடுத்துப் பாண்டிய நாடே ஒரு புதிய சக்தி பெற்று மறுமலர்ச்சியை அடைந்து கொண்டிருந்தது. எங்கும் விளைச்சலிலும், வாணிபத்திலும் கல்விச் சாலைகளிலும் கோவில்குளங்களிலும் மக்கள் புது வேகம் பெற்று உழைத்துக் கொண்டிருந்தார்கள்.

''நான் தெலுங்கன்; நீங்கள் தமிழர். அப்துல் இஸ்லாமியர்; நீங்கள் சைவராகவோ வைணவராகவோ இருக்கலாம். இப்போது கிறிஸ்தவர்களும் இங்கு வந்து குடியேறியிருக்கிறார்கள். இருந்தாலும் மொழியும் சரி, சமயமும் சரி நம்முடைய நெறிகளை வளர்க்கப் பயன்பட வேண்டுமே தவிர, நம்முடைய வெறிகளைத் தூண்டி விடும் அளவுக்கு அவற்றை நாம் இழிவுபடுத்தக் கூடாது. மொழி நெறியும், சமய நெறியும் எனக்கும் வேண்டும்; உங்களுக்கும் வேண்டும். இந்த நெறிகளையே வெறியாக நாம் பயன்படுத்தினால் நாகரிக வளர்ச்சியற்ற காட்டுமிராண்டிகளாக நாம் உட்பகை வளர்த்து அழிந்து விடுவோம். அரும்பாடுபட்டு, அன்னியரிடமிருந்து மீட்ட நம் வாழ்வை மீண்டும் அவர்களிடமே பறிகொடுத்து விடுவோம். ஆகவே, இப்போது நாம் நடத்தும் போரை, நம்மை அழிக்க நம் வெளி எல்லையில் காத்திருக்கும் பகைவர்களோடு நடத்தும் போராகவும் கருத வேண்டும்!''

விசுவநாதனின் தலைமையில் திரண்டெழுந்த பெரும் படை தெற்கு நோக்கிக் கிளம்பியது. அத்தகைய எழுச்சிமிக்கதொரு காட்சியை மதுரைத் திருநகரத்து மக்கள் அவர்கள் வாழ்வில் கண்டதில்லை.

விஜயநகரத்திலிருந்து உதவிக்காகப் புறப்பட்டிருந்த படைகள் இன்னும் மதுரைக்கு வந்து சேரவில்லை. வந்து சேர்ந்தவுடன் அவற்றோடு புறப்பட்டு வரும்படி சந்திரசேகர பாண்டியரிடம் கேட்டுக் கொண்டு, விசுவநாதன் முன்னதாகவே புறப்பட்டு விட்டான்.

நாடெங்கிலும் விசுவநாதனின் பெயர் அவனுக்கு முன்னதாகவே பரவியிருந்ததால், வழி நெடுகிலும் மக்கள் கூட்டம் அவனைக் கண்டு வணங்கக் காத்து நின்றது. புதியதொரு நம்பிக்கையின் சின்னமாக, புதியதொரு வாழ்வின் வழிகாட்டியாக, புதியதோர் உலகு படைப்பவனாக அவர்களுக்கு அவன் தோன்றினான்.

மக்களின் பேரன்பு விசுவநாதனின் விழிகளில் ஆனந்தக் கண்ணீர் சுரக்கச் செய்தது. அவன் அப்போது கிருஷ்ணதேவராயரின் சொற்களை நினைவுபடுத்திக் கொண்டான்.

''என் மீது அன்பு கொண்ட இந்த லட்சோப லட்சம் குடிமக்களின் ஊழியன் நான். இவர்களுடைய வாழ்க்கையைச் செழிப்புறச் செய்து இவர்களைப் பாதுகாக்கும் பேராற்றலை இறைவன் எனக்கு அருள வேண்டும். இவர்களுடைய தலைகள் மீது நடக்கும் அகந்தைச் செருக்குள்ள தலைவனாக என்னை மாற்றி விடாதே! இவர்களைத் தலைமேல் சுமக்கும் ஊழியனாகவே என்னை என்றென்றும் வைத்திரு ! 'குடிமக்களைத் தலை மீது சுமந்த தலைவன் அவன்' என்ற நற்பெயருக்கு என்னை இலக்காக்கு!'' என்று நாத் தழுதழுக்க அவன் இறைவனை வேண்டிக் கொண்டான்.

அவன் இறைவனிடம் சரணடைந்த அதே வேளையில் அவனுக்கு மெய்சிலிர்த்தது.

''வாழ்க, விசுவநாத பாண்டியர்! வெல்க, விசுவநாத பாண்டியர்!'' என்று திருநெல்வேலி நகரத்துக் குடிமக்கள் அவனை வாழ்த்தொலி எழுப்பி வரவேற்றார்கள்.

''ஆம், நான் இனிப் பாண்டியன்தான்; விஜயநகரத்து விசுவநாத பாண்டியன் எனும் ஊழியன் !'' என்று தனக்குத் தானே கூறிக் கொண்டான்.

தாமிரவருணிக் கரையில் படை இறங்குவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்றன. கூடாரங்கள் அமைக்கும் வேலைகளை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தான் விசுவநாதன். பொழுது சாய்ந்து இருட்டத் தொடங்கியது. எங்கிருந்தோ முகத்தில் ஆனந்தக் களி துள்ள விசுவநாதனை நோக்கி ஓடி வந்தார் அரியநாத முதலியார்.

''இளவரசியாரைப் பத்திரமாகக்கொண்டு வந்து சேர்த்து விட்டேன். திருநெல்வேலி மாளிகையில் அவர்கள் பாதுகாப்போடு இருக்கிறார்கள். உடனடியாகத் தங்களைக் காணத் துடிக்கிறார்கள் '' என்றார்.

விசுவநாதனுக்கு ஏற்பட்ட ஆனந்தத்துக்கோர் எல்லையில்லை. என்றாலும் அவன் தன் பரபரப்பு அடங்கியவுடன், ''பகைவர்கள் எங்கே இருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

''நம்மைப் போலவே மறு கரையில் காட்டுக்குள் அவர்கள் முகாமிட்டிருக்கிறார்கள்.''

உள்ளத்தைக் கல்லாக்கிக் கொண்டு, ''முதலில் போரைக் கவனிப்போம் !'' என்றான் விசுவநாதன். அரியநாதமுதலியார் திகைத்துப் போனார். (தொடரும்)

# விவசாயத்தை லாபகரமாகச் செய்யுங்கள்.




அதிக உணவு உற்பத்திக்கு கூட்டு விவசாயத்தில் மேலும் மேலும் டிராக்டர்கள் உபயோகப்படுத்தப்படுகின்றன.

டிராக்டர் டீஸல் என்ஜின்களுக்குப் பொருத்தமான ப்யூவல் இஞ்செக்ஷன் எக்விப்மென்டை மைகோ தயாரிக்கின்றது

மைகோ எக்விப்மெண்ட் மிகமிக நுட்பமாகத் தயாரிக்கப்பட்டு தரத்திற்கும், நம்பகத்திற்கும் கடுமையாக சோதிக்கப்பட்டவை,

அசல் மைகோ எக்விப்மெண்ட் உபயோகித்து விவசாயத்தை லாபகரமாகச் செய்யுங்கள்,

## விவசாயம் செழிக்க
## மைகோ சேவை செய்கிறது

**MICO**



LICENCE **BOSCH**

**மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கோ., லிட்., பெங்களூர்**

விற்பனை நிலையங்கள் :—

பம்பாய்-18 (WB) : 79, டாக்டர் அன்னிபெஸன்ட் ரோடு, வோர்லி

கல்கத்தா-16 :— 91A, பார்க் தெரு

மதராஸ்-2 :— 1/155 மவுண்ட் ரோடு

புதுடெல்லி 1 :— காஜியாபாத் என்ஜினீரிங் கோ., 29A/1 ஆஸப் அலி ரோடு



செய்து வைக்கும் முயற்சியில் இறங்கத் தைரியமின்றித்தான் தந்தை அவளை மேலே படிக்கட்டும் என்று விட்டுவிட்டாரோ என்று கூடச் சில சமயம் தோன்றும் அவளுக்கு.

ராமு அவள் அறிவுக்கும் சாமர்த்தியத்துக்கும் ஆசைப்பட்டுத்தான் அவளை மணம் செய்து கொண்டான். அவளுக்குத் தெரியும் அது. இந்த எட்டு வருஷங்களாய் அவள் தன் ஏமாற்றம் எதுவென்று வெளியிட்டதில்லை. பிறருடன் தன்னை ஒப்பிட்டதில்லை. அவளுக்கு ஆறுதல்தான் அது. ஆனால் கூடவே, மூடிய பாத்திரத்துள் பொங்கி அடங்கும் ஆவியைப் போல, அவள் மனம் மௌனமாகக் குமுறிக் கொண்டிருக்கும்.

# அழியாத மெருகு

கல்யாணி கண்ணை விழித்ததும் ஜன்னல் கதவைத் திறந்து விட்டாள். சுகமான குளிர்ந்த காற்று கண்ணை ஒத்திற்று.

எழுந்ததும் தாலிச் சரட்டை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். மனத்தில் முதல் நாள் இரவு படுக்கப் போகுமுன் கடைசியாக நினைத்த எண்ணம் தலையெடுத்தது. படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டுப் பல் தேய்த்து, பால்காரனை வரவேற்க வாசல் விளக்கைப் போட்டாள்.

பால்காரன் வந்து குவளையைக் கவிழ்த்து விட்டுக் கறக்க ஆரம்பித்து விட்டான். அவள் கன்னத்தில் கையைத் தாங்கியபடி உட்கார்ந்திருந்தாள். அவர்கள் அந்த வீட்டுக்குக் குடி வந்து எட்டு வருஷங்களாயின. தினமும் கண் விழிக்கும் போதும், படுக்கப் போகும் போதும், பார்வையில் சாட்சியாகத் தெரியும் கோவிற் கோபுரம். நாகத்தின் கண்களைப் போல அதன் முடியில் தெரியும் இரட்டை விளக்குகள். அந்தச் சூழ்நிலையில், அந்தப் பின்னணியில் அவர்கள் குடும்பம் தொடங்கியது நேற்றுப் போல நினைவிருக்கிறது. சுந்தரும் ராஜியுமாக இரு குழந்தைகள் அவர்களிடையே தோன்றி வளர்ந்து விட்டதை நினைக்கும் போது சிறிது ஆச்சரியமாகத்தான் இருந்தது.

மணமாகுமுன் அவள் பெண்கள் கல்லூரியில் 'லெக்சரரா'க இருந்தாள். ''கல்யாணி ரொம்பக் கெட்டிக்காரி. பிள்ளையாகப் பிறந்திருந்தால் ஐ.ஏ. எஸ்.'' என்று அவள் தந்தை பெருமையோடு சொல்லிக் கொள்வார்.

அவள் பிள்ளையாகப் பிறந்திருக்கக் கூடாதா என்று அவள் தாயும் ஏங்கியதுண்டு. ஆனால் அதன் காரணம் வேறு. அம்மா நல்ல சிவப்பு. களை ததும்பும் முகம். எடுப்பான தோற்றம். அம்மாவின் அழகுக்கு அப்பா சற்றும் ஏர்வை இல்லைதான். இருவருமாக நிற்கும் போது, அவர்களை ஜோடி சேர்த்துவிட்ட ஆண்டவனின் லீலை ரஸக் குறைவாகத்தான் தோன்றும், பார்ப்பவர்களுக்கு. அவள் தந்தையைத்தான் கொண்டு விட்டாள் தோற்றத்துக்கு. சீக்கிரம் மணம்

பாலை அளந்து விட்டு விட்டுப் போய்விட்டான் பால்காரன். ஏதோ ஒரு சிந்தனையோடு அவள் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கினாள். குழந்தைகளை எழுப்பிவிட்டு, காப்பி தயார் செய்துவிட்டு, சமையலுக்குக் கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்த போதுதான் ராமு அவளை ஏழு மணிக்கு மேல் எழுப்பச் சொன்ன ஞாபகம் வந்தது.

படுக்கையில் அரைக் கண் விழித்தபடி படுத்திருந்தான் ராமு. மேலே மின் விசிறி ஓயவில்லை. அவள் அருகே உட்கார்ந்ததும் கழுத்தைச் சுற்றிக் கைகளைப் பிணைத்து இழுத்துக் கொண்டான். அவன் கண்கள் அவள் கண்களைச் சந்தித்தன. அவள் விழிகள் முழுக் கறுப்பல்ல; கருநீலம். உற்றுப் பார்க்கும் போது அதில் எப்போதும் ஒரு குறும்பின் மினுமினுப்புத் தெரிவது போல இருக்கும்.

''மணி எவ்வளவு?''

''ஏழேகால்.''

''நிஜமாகவா?''

''ரேடியோவில் தமிழ்ச் செய்தி அப்படித்தான் சொல்லுகிறது.''

''குழந்தைகள் எங்கே?'' என்று அவன் சோம்பல் முறித்தபடி கேட்டான்.

''சுந்தர் குளிக்கப் போய் விட்டான். ராஜி இன்னும் உங்களைப் போலப் பல் தேய்க்கச் சோம்பல் பட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாள்.''

அவன் சிரித்துக் கொண்டான். ''இன்றைக்கு லீவு நாள்தானே? நான்கூட எழுந்திருந்திருப்பேன் நீ எழுப்பாமலேயே. கண்ணைப் பிட்டுக் கொள்ளும் போது ஞாபகம் வந்தது. சரி நீ எழுப்ப வருவாய் என்று இருந்து விட்டேன்.''

''குழந்தைகள் வெளியே போக வேண்டும் என்கிறார்கள். சமையல் செய்துவிட்டு அழைத்துக் கொண்டு போய்விட்டு வரலாமென்று இருக்கிறேன்.''

''ஏன்? இன்றைக்கு என்ன அப்படித் தனியாக?'' என்று அவன் கேட்டதும் அவள் சொல்லிவிட நினைத்தாள். பிறகு தன்னை

அடக்கிக் கொண்டாள். அவனே தெரிந்து கொள்ளட்டுமே? அப்படித் தெரிந்துகொள்ளா விட்டால் போகட்டும். மற்ற நாட்களைப் போல இதுவும் ஒரு நாள். அவ்வளவுதான்.

அவள் எழுந்து வந்து அவனுக்குத் தயார் செய்த காப்பியை, பவுன் நிறமாய், நுரை ததும்ப, கம கமவென்று மணம் கமழக் கொண்டு வந்து வைத்தாள். ராஜி பல் தேய்த்தாயிற்று. சுந்தர் குளித்து விட்டான்.

சமையலை முடித்து இறக்கி மூடி வைத்தா யிற்று. அறைகளைப் பூட்டிச் சாவிக் கொத்தை, செய்தித் தாளைப் பிடித்தபடி உட்கார்ந்திருந்த கணவனின் முன் வைத்தாள்.

''உங்களுக்கு என்ன வேணும்?''

''நீதான் வேணும்.''

கையைத் தொட வந்தவனிடமிருந்து விலகி உடம்பை நெளித்துக் கொண்டாள். புன்னகையில் கன்னங்கள் குழிந்தன. குழந்தைகள் அருகில் இருப்பதுகூட ஞாபகமிருப்ப தில்லை சில சமயம் அவனுக்கு.

''நான் கடைவீதிப் பக்கம் போவேன். அங்கே என்ன வேண்டுமென்று கேட்டேன்.''

''இத்திப்பாய் எனக்குப் பிடித்தது எது என்று உனக்குத் தெரியுமே?''

''சரி.'' அவள் சிரித்துக் கொண்டே கிளம்பி விட்டாள்.

காலை நேரத்து வெய்யில் சுரீலென்று பொரிந்தது. ஆனால் அதன் கடுமை தெரியாத மர நிழல் அமைந்த திறந்தவெளிச் சிற்றுண்டி சாலை. வரிசை வரிசையாக நின்ற கார்கள். மேஜையைச் சுற்றிப் போட்டிருந்த பிரம்பு நாற்காலிகளில் நின்று, உட்கார்ந்து, குதித்து விளையாடிக் கொண்டிருந்தாள் ராஜி. நாற்காலிகளைச் சுற்றி, கார்களைச் சுற்றி, வளைய வந்து ஓடிக் கொண்டிருந்தான் சுந்தர்; எத்தனை சொல்லியும் கேட்காமல். ஆனால் அன்று குழந்தைகளைக் கடிந்து கொள்ள அவளுக்கு மனம் இல்லை.

சிற்றுண்டி அருந்தி, இரண்டாம் தடவை காப்பியும் ஆயிற்று. குழந்தைகள் உற்சாகமாகக் கிளம்பி விட்டார்கள். கடைத்தெருவின் அலங்கார அணிவரிசைகள். சூப்பர்மார்க்கெட்டில் இரண்டொரு பொம்மைகள், ஆளுக்கொன்றுப் பொறுக்கிக் கொண்டார்கள். பலூன்களும், பட்டாணிக் கடலைப் பையுமாக மிருகக் காட்சிச் சாலையில் நுழைந்தார்கள். மர நிழலில் கற்பெஞ்சியில்



உட்கார்ந்தார்கள். உட்கார்ந்த இடத்துக்கு அருகே, மடக்கிவிட்டிருந்த நீரோடையில், மரப் பாலத்தின் வளைவுக்கு அடியில் படகுகள் ஊர்ந்தன. கட்டடங்களின் தடங்கல் இன்றி விசாலமாகக் கவிந்த வானம். இடமும் வெளியும் ஓசைகளும், இன்பமாய் இதமாய் இழைந்தன.

''டேய், மணி..... உட்காரு. சொன்னால் கேட்க மாட்டாய் ?''

அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு, கரும் பலகையில் ஆணி இழுத்தது போல, அந்தக் குரல். பையனின் விழிகள் பயத்தில் வளையங்களாயிருந்தன. அவன் தாய் அதட்டிய குரலும், நீட்டிய கையுமாக, பின்னாலேயே வந்து கொண்டிருந்தாள். பையன் வளைந்து முதுகில் அடி விழாமல் தப்பித்துக் கொண்டான்.

ராஜிக்கு ஒரே குதூகலம். குத்து மண்ணை வாரி எடுத்து விளையாடினாள். ஒவ்வொரு மிருகத்தையும் கூண்டில், வலைக்குள், எட்டிப் பார்க்கும் போது ஒரு சந்தோஷம். புதிதாகக் கற்றுக் கொண்ட ஆங்கிலச் சொற்களைச் சொல்லிப் பார்த்துக் கொண்டே வந்தாள்; ''பேர்—கரடி, டைகர்—புலி, டீர்—மான்'' என்று வாயால் கொட்டியபடி. அவள் ஏதாவதொன்றைத் தவறிச் சொல்லி விட்டால் சுந்தர் அவளைப் பார்த்து திருத்துவான். அதில் அவனுக்கு ஒரு சந்தோஷம்.

கூடவே அந்தப் பையன் — மணியும் வந்து கொண்டிருந்தான். அவனுக்கு எதற்கும் பயம் ; நிற்பதற்கும் நடப்பதற்கும்கூடத் தான். 'அவனுக்காக இயற்கையாக விளைந்தது அல்ல அது. அவன் தாயின் கண்டிப்பு கூடவே தொடர்ந்து கொண்டே வந்த உணர்ச்சிதான். இயற்கையான மகிழ்ச்சியோடு, இயல்பாகத் துள்ளித் திரிந்து விளையாட வேண்டிய பருவத்தில், குழந்தையை அவன் தாய் தட்டி நிறுத்திவிட்ட விதமாய்த் தோன்றியது அவளுக்கு. நெஞ்சில் ஒரு பரிதாபம் தலைநீட்டிற்று.

படகில் ஏறினார்கள் எல்லோரும். குளிர்ந்த, இருளின் நிழல் கவியும் அமைதியான நீர் நிலை. கரை ஓரம், நீரில் தவழ்ந்த வெண்ணிறப் பறவைகள். பசும் புல் தரையில் நின்றபடி குழந்தைகளை வெறித்துப் பார்த்த மான்கள். பட்சிகளின் ஓயாத கூவல் ஒலி. குழந்தைகளுக்கு ஒரே சந்தோஷம். படகின் மூலைக்கு மூலை தாவி ஓடிக் கொண்டிருந்தார்கள். கைகொட்டிக் கூச்சலிட்டு ஆர்ப்பரிக்கும் மகிழ்ச்சி. அந்த உணர்ச்சி குழந்தை மணியையும் பிடித்துக் கொண்டது. அவனும் ஓடினான்.

''டேய்! சும்மா இருக்க மாட்டாய் ? உதை கேட்கிறதாக்கும் ?''

தாயின் கூச்சல் கேட்டதும் மணி நீர் தெறித்த பாலாய்ச் சட்டென்று அடங்கிவிட்டான். மகிழ்ச்சி மறைந்து சுருங்கிவிட்ட முகத்தைப் பார்க்கையில் அவளுக்கு ஏதோ ஒரு வேதனை தோன்றிற்று. சொல்ல வாயெடுத்தவள் சட்டென்று தன்னை அடக்கிக் கொண்டாள். பிறர் ஏதாவது சொல்ல அவள் இடந்தர மாட்டாள். அப்படி ஒரு சொல்லை ஏற்க அது நாள் இல்லை.

வீடு திரும்பும்போது நடுப்பகல் ஆகிவிட்டது. பசி முற்றிப் போய்விட்டது. குழந்தைகளின் முகத்திலும்கூட ஆடிக் களைத்துப் போன ஆயாசம் தோன்றிவிட்டது. வீடு திரும்பும்போது டாக்ஸியில் சுந்தர் அவள் மடியில் செல்லமாய்க் கவிழ்ந்துகொண்டான்.

''அம்மா, உன்னை ஒன்று கேட்கணும்!''

''என்ன வேணும்? கேளு.''

''நீ...:..நீ அந்த மணியோட அம்மாமாதிரி என்னை என்னிக்கும் விரட்ட மாட்டியே?''

சட்டென்று அவனைச் சுற்றி அவள் பிடி இறுகிற்று. வேதனை கலைய உள்ளூறப் பொங்கும் ஓர் உணர்ச்சியின் வெறி. அது விளைந்த மகிழ்ச்சியின் திளைப்பு. குழந்தைக்காக என்று இல்லை. கணவனுக்காக என்றும் இல்லை. எத்தனையோ நாட்களாக அடக்கி வைத்திருந்த தவிப்பு உடைந்து ஓடுவது போன்ற உணர்ச்சி.

அவள் மனம் கனிவைத் தவிர வேறு எதையும் அறியாது. பரிவையும் அன்பையும் தவிர வேறெதையுமே அவள் காட்ட மாட்டாள்; யாரிடமுமே. அவள் பார்வையில் அழகு இல்லாமல் இருக்கலாம். கண்ணைக் கட்டி நிறுத்தும் கவர்ச்சியும் இல்லாமற் போகலாம். ஆனால் அன்பு ததும்பும் குளிர்ந்த நிலத் தவிர் ஒளிக்குக் குறைவே இராது. இது நிச்சயம்.

வீட்டில் ராமு அவளுக்காகக் காத்துக் கொண்டிருப்பது போல வாசலிலேயே நின்று கொண்டிருந்தான். அவள் படியில் காலை வைத்ததுமே அவசரமாய்ச் சொன்னான்....

''கிருஷ்ணன் வீட்டில் வந்து தேடிவிட்டுப் போனார்கள். சகுந்தலாவுக்கு வலி நேர்ந்து விட்டதாம். உன்னை வந்ததும் அங்கே வரச் சொன்னார்கள்.''

குழந்தைகளை இறக்கிவிட்டு, பொட்டலங்களை முன் வாசல் நாற்காலியின் மேல் வைத்துவிட்டு, அந்த டாக்ஸியிலேயே அவள் போய் விட்டாள்.

உதவிக்கு என்று நேரும்போது அவர்களுக்கு முதலில் மனத்தில் தோன்றும் பெயர் அவளுடையதுதான். கூப்பிட்டால் அவள் போய் வரத் தயங்க மாட்டாள். அவர்களுக்கும் அது தெரியும்.

கிருஷ்ணனின் மனைவி சகுந்தலாவுக்கு அவள் வயது இருக்கலாம். மணமாகிப் பத்து வருஷங்களாயிற்று. குழந்தைகள் இல்லை. அதனால் தாய்மை அடைந்தது முதலே அவளுக்கு மனத்தில் ஒரு கிளர்ச்சிதான். ஒரு அச்சமும் கலவரமும் தோன்ற ஒவ்வொன்றுக்கும் அவளைக் கலந்துகொள்வாள். 'என்ன உணவு சாப்பிடுவது? என்ன டானிக் எடுத்துக் கொள்வது? என்னென்ன காரியங்கள் செய்யலாம்? எது கூடாது?' எல்லாக் கேள்விகளும் அவளிடம்தான். தன் வயதே உள்ள ஒரு பெண் தன்னிடம் அப்படி யோசனைகள் கேட்பதை நினைத்துக் கல்யாணி தனக்குள் வேடிக்கையாகச் சிரித்துக் கொள்வாள்.

அவளோடு இருந்தபோது தன் பழைய அனுபவங்களையே மீண்டும் பார்ப்பதுபோல் இருந்தது அவளுக்கு. அதைப்போல அவளும் அங்கு வரநேர்ந்ததுண்டு. ஆனால் அவளுக்குத் துணை நிற்க ஒரு கல்யாணி இருந்ததில்லை. தாய் இல்லாத குறையை எண்ணி ஏங்கிய உணர்ச்சிகள் அவளுக்குள்ளேயே மணலில் விழுந்த நீராய் மறைந்துவிட்டன. இப்போது அவள் சகுந்தலாவுக்கு உதவ முடிந்த விதம்? தனக்குக் கிடைக்காத ஒன்றைத்

# க்ருஷன் ஸால்ட்ஸ்

## அருந்துங்கள்

## அது **மூட்டு வலியை** அகற்ற உதவுகிறது

அதன் பயன்
மிக்க 7-வழிச்
செயல்முறை
உங்கள் உடல்
நலனைத்
தக்கபடி
பாதுகாக்கிறது




நிக்கொலஸ் Ⓝ தயாரிப்பு

தூய்மைக்கும், தரத்திற்கும் சிறந்த
பெறும் உத்தரவாதம்

KS. G. 5

---

# ரண சிகிச்சையின்றிப் புதுமுறையில் வலிமயமான மூலத்தைச் சுருக்குகிறது, நமைச்சலை நிறுத்துகிறது, வலிதணிக்கிறது

நியூயார்க்– தீவிரப் பிணிகளில் தவிர மற்றபடி ரண சிகிச்சை என்பதே தேவையில்லாமல் மூலத்தைச் சுருக்கி, நமைச்சலை நிறுத்தி, வலி தணிக்கும் அற்புத வல்லமையுள்ள புதுவித மருந்துப் பொருளை முதன்முறையாகக் கண்டுபிடித்துள்ளது விஞ்ஞானம்.

டாக்டர்களின் கண்காணிப்பில் நிகழ்த்தப்பட்ட பரிசோதனைகளே இதற்கு அத்தாட்சி– வலியும் நமைச்சலும் உடனடியாகத் தணிக்கப்பட்டன. இதனுடன் மெல்ல வலியாற்றிய அதேசமயம் உள்ளபடி சுருக்கமே ஏற்பட்டது.

அனைத்திலும் ஆச்சரியம் என்னவெனில், பத்து இருபது ஆண்டுகள் நீடித்திருந்த பிணிகளிலும் இந்த அபிவிருத்தி நிலைபெற்றதுதான்.

உலகப் புகழ்பெற்ற ஆராய்ச்சிக் கழகம் ஒன்றின் கண்டுபிடிப்பாகிய பயோடைன்* என்ற புதிய மருந்துப் பொருளே இதன் இரகசியம். இப் புதிய மருந்துப் பொருள் தற்போது ப்ரிப்பரேஷன் ஹெச் என்ற பெயருடன், களிம்பு வடிவிலே அளிக்கப்படுகிறது. மூலத்தைச் சுருங்க வைப்பதோடன்றி, மலப் பாதைக்கு மழமழப்பூட்டி, மலப்போக்கினை வலி அற்றதாக்குகிறது. ப்ரிப்பரேஷன் ஹெச், 30கி. மற்றும் 50கி. டியூப்களாக இருமுனையுடன், எல்லா உயர்தர மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

மூல நோய் பற்றி விளக்கும் சிறு நூலை (ஆங்கிலம் அல்லது தமிழ்) இலவசமாகப் பெற இன்றே எழுதுக: டிபார்ட்மெண்ட் 38, ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட்., போஸ்ட் பாக்ஸ் 976, பம்பாய் 1 பி.ஆர்.

*டிரேட் மார்க்

CHH-2 TAM

தான் பிறருக்குக் கொடுக்க முடிந்ததை எண்ணியபோது மனத்தில் ஒரு பெருமிதம் மலர்ந்தது.

அவள் வீடு திரும்பியபோது இருட்டி விட்டது.

அவள் சாப்பிடக்கூட இல்லை. பகல் முழுதும் அலைந்த களைப்பு கண்களை மருட்டிக் கொண்டு வந்தது. அதுவரை ஏதோ ஓர் ஊக்கத்தில் அடங்கியிருந்த ஆயாசம் மேலெழுந்து அலைத்தது. வீட்டில் நுழைந்த போதுதான் மறுபடி அந்த ஞாபகம் வந்தது. அந்த நாள்? அதை யாரும் கவனிக்கவில்லை. அவனும்கூடத்தான். ஆனால் அது கழிந்த விதத்தை எண்ணியபோது மனத்தில் குறை ஏதும் தோன்றவில்லை. அவனும் கூடத்தான். ஏதும் தோன்றவில்லை. ஒரு திருப்தியே நிறைந்து நின்றது.

அவளுக்கு நினைவூட்டும் வாழ்த்துக்கள் வேண்டாம். ஞாபகமாகப் பரிசுகள் தர வேண்டாம். அவள் கணவனும் குழந்தைகளும்கூட அதைப் பற்றிக் குறிப்பிட வேண்டாம். ஆனால் அவள் தன் உணர்ச்சிகளைப் பகிர்ந்துகொள்வாள். கணவனின் பிரியத்தைக் குழந்தைகளின் அன்பில், தோழியின் நட்புறவில், தன் முக்கியத்துவத்தை இழந்து கலந்து விடுவாள். அந்த முறையில் அன்று அவள் அதை வேறு எந்த விதமாய்க் கொண்டாடி இருக்க முடியும்?

கூடத்தில் பாயை விரித்துக் குழந்தைகள் உட்கார்ந்தார்கள். அருகே உட்கார்ந்து ராமு அவர்களுக்குச் சமாதானமாய் ஏதோ கதை சொல்லிக் கொண்டிருந்தான். சட்டென்று அவள் பார்வை விரித்த பாயின் மேல் விழுந்தது. அங்கே வண்ண வண்ணமாய்ப் பத்துப் பதினைந்து வாழ்த்துக்கள் சிதறிக் கிடந்தன. நாலைந்து பெட்டிகளில் ஏதேதோ சாமான்கள். அப்பாவின் கையெழுத்துத் தெரியும் நீல நிறக் கடிதம். அவள் கண்ணில் நீர் பொங்கியது.

அவர்கள் மறக்கவில்லை. மற்ற நாட்களைப் போல ஒரு நாளாகவும் அதுவும் ஓடவில்லை. ராமுவும் குழந்தைகளுமாக ஒரே குரலில் கூச்சல் போட்டார்கள்.

''ஹாப்பி பர்த் டே!''

அவள் அவர்களிடையே உட்கார்ந்து கொண்டாள். சுந்தர் அவளுடைய முன் ருகையை எடுத்து நெற்றியைத் துடைத்துக் கொண்டான். ராஜி செல்லமாய் மடிமேல் உட்கார்ந்து கொண்டாள். அவள் குழந்தைகளை இழுத்து அணைத்துக் கொண்டாள்.

''என்ன ஆயிற்று கிருஷ்ணனின் மனைவிக்கு?''

''ஆண் குழந்தை. இப்போதுதான் ஒரு மணி நேரமாயிற்று. அதற்குப் பிறகுதான் நான் புறப்பட்டு வந்தேன்.''

''குழந்தையின் பிறந்த நாளைக் கொண்டாடும்போதெல்லாம் அவர்கள் இனிமேல் உன் பிறந்த நாளையும் நினைத்துக்கொள்வார்கள். அவர்களால் உன்னை மறக்க முடியாது.''

கல்யாணி தலையைக் குனிந்து கொண்டாள். அந்தப் பேச்சு பெருமிதமாக இருந்தது. சந்தோஷமாகவும் இருந்தது. ஆனால் கூடவே அந்தக் குரலில் ஏதோ உறுத்திற்று; அவளுக்கும் சுட்டிக் காட்டுவதைப் போல.

குழந்தைகள் உள்ளே ஓடிவிட்டதும் அவன் அவள் கையை எடுத்துக் கொண்டான்.

''என்னிடம் ஏன் காலையில் சொல்லவில்லை நீ?''

''எதற்குச் சொல்லிக் கொள்ள வேண்டும்? நான் என்னை ஒருபொருட்டாகக் கருதிக் கொண்டதில்லை; நினைத்ததும் இல்லை; என்றைக்குமே.''

''நீ அடிக்கடி இதைப் போலச் சொல்லிக் கொள்கிறாய்—''

''உண்மைதானே?''

''இல்லை. நான் மணந்து கொண்டவளை எனக்குத் தெரியும், அவள் எனக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை.'' அவன் குரல் விம்பாய் மறுத்தது.

''நான் ஒரு சாதாரணமான பெண். என்னைப்பற்றி நீங்கள் எப்படி உணர்ந்திருந்தாலும் எனக்கு அதில் ஆச்சரியமிருக்காது. நான் பாராட்டை எதிர்பார்த்ததில்லை. — உங்களிடம் கூடத்தான். என் எல்லைகள் எனக்குத் தெரியும். பார்வையிலோ, பேச்சிலோ, அழகிலோ, என்னுடைய அளவு சொற்பமானதென்று தெரியும். அதற்கு நீங்கள் தந்திருக்கும் இடமே.'' — அவளால் பேச முடியாமல் உணர்ச்சி பொங்கிற்று. அவன் அவளைத் தன் புறமாய் இழுத்துக் கொண்டான்.

''கல்யாணி, இப்படி ஒரு நினைப்பு உனக்கு இருப்பது எனக்குத் தெரியும். அதனால்தானோ என்னமோ மற்ற விதங்களில் நீ உன்னால் முடியும் என்பதை வெளிப்படுத்துவதைப் போல அளவு கடந்த ஆர்வம் காட்டுகிறாய்; என் மனத்தில், குழந்தைகளிடத்தில், பழகுகிறவர்களிடத்தில், உன் அன்பு வடிவம் தெரியும்படி.''

''இருக்கலாம். உங்கள் காதில் விழுந்த இல்லையா ?' 'இவளிடம் அப்படி என்ன கண்டு விட்டான் ராமு?' என்று சிலர் சொல்வதைக் கேட்டதில்லையா? நான் கேட்டிருக்கிறேன்.''

''அந்தக் கேள்விக்குப் பதில் வேண்டுமானால் உன்னைச் சுற்றிப் பார்த்துக் கொள் கல்யாணி. உன்னை இன்னும் மறக்காத உன் பழைய மாணவிகள், உன்னோடு பழகிய தோழிகள், உன் அன்புக்கும் பரிவுக்கும் ஆளான குழந்தைகள் — அவர்கள் அனுப்பியிருக்கும் வாழ்த்துக்களைப் பார். நான்கூட மறந்து விட்டேன்; அவர்களால் மறக்க முடியவில்லை. அந்த வாழ்த்துக்கள், பரிசுகள், வெறும் பொருட்கள் இல்லை. அவர்கள் மனத்தில் நிலவும் உன் வடிவத்துக்கு நினைவு தந்து உயிர் கொடுக்கும் செயல் அது. அதுதான் உண்மையான 'பர்ஸனாலிடி'.

''அழகு நிறத்தில் இல்லை; அமைப்பிலும் கவர்ச்சியிலும் இல்லை; அவைகளுக்கு அப்பால் அதற்கு அடித்தளமாய் அமையும் அழியாத மெருகு ஒன்று இருக்கிறது. அன்பு தரும் மனம், பிறர் உணர்ச்சிகளை மதிக்கும் எளிமை, நளினமான பண்பு, அவைகளில்தான் அது தெரியும். உன்னிடம் அவற்றைத்தான் நான் கண்டேன் கல்யாணி.''

''போதும். போதும். ரொம்ப அடுக்காதீர்கள்'' என்று கல்யாணி அவன் வாயைப் பெருமிதம் தெரிய மூடினாள். ராமு அந்த விரல்களை எடுத்து இதழ்களில் அழுத்திக் கொண்டான்.




- யானை புகுந்த வயல்!
- பிள்ளையார் பிடிக்கப்போய்...!
- காற்றினிலே வரும் கீதம்
- கலப்படம் எங்கே?

அந்நாட்டரசன் மந்திரிகளின் பேச்சைக் கேட்டு, குடிமக்களிடம் எண்ணற்ற வரிகள் விதித்து விட்டான். மக்களால் தாங்க முடியாத அளவுக்கு வரிச் சுமை.

புலவர் ஒருவர் அரசவைக்கு வருகிறார். மன்னனைச் சம்பிரதாயமாக வாழ்த்திவிட்டுச் சாமர்த்தியமாகத் தம் கருத்தை வெளியிடுகிறார்:

''வேந்த! இன்று காலை நான் ஒரு காட்சி கண்டேன். ஒரு பெரிய யானை பரந்தகன்ற வயல் வெளி ஒன்றில் புகுந்து கதிர்களைத் தின்றும், காலால் மிதித்தும் நாசம் செய்தது. காய்ந்த நெல்லை அறுத்துக் கவளம் கவளமாக அந்த யானைக்குக் கொடுத்தால் ஒரு மா அளவுக்குக் குறைவாக இருப்பினும் பன்னாள் உணவுக்குப் பயன்படும். அப்படியின்றி நூறு வயல்கள் ஆயினும் யானையே தனித்துப் புக்கு உண்டால் அதன் வாய்க்குள் புகுவதைவிட அதன் காலால் கெடுவது அளவில் பெரிதாகும்.

''அரச, கொஞ்சம் சிந்தித்துப் பார். அறிவுடைய வேந்தன் அல்லவா நீ! நீ அரசியல் நெறியறிந்து, அளவாக வரிப் பணம் வாங்கினால் உனக்கும் கோடி கிடைக்கும். நாடும் பெரிதும் செழிக்கும். அவ்வாறின்றி உனக்கு வலிமை இருக்கிறது என்ற பதவி வெறியால் தகுதியறியாத ஆரவார மந்திரிமாரை நம்பி, அறிவிழந்து, கருணையின்றி, குடிகளை அடிக்கடி துன்புறுத்தித் இறை வசூலித்தால் யானை புக்க புலம் போல நீயும் உண்ண மாட்டாய்! உலகமும் நாசமாகும்.

''காய்நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட் காகும்;
நூறுசெறு ஆயினும் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்.
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்தும்; நாடு பெரிதும் நந்தும்;
மெல்லியன் கிழவனாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம் போலத்
தானும் உண்ணான்; உலகமும் கெடுமே!''

— பிசிராந்தையார் (புறநானூறு)

[மா நிறைவு - ஒரு மா என்னும் அளவு; செறு - வயல்; தமித்து - தனியே; யாத்தும் - உண்டாகும்; நந்தும் - செழிக்கும்; கிழவன் மெல்லியனாகி - அரசன் அறிவு மெலிந்தவனாகி; வரிசை - தகுதி; கல்லென் - ஆரவாரம் செய்கின்ற; சுற்றம் - மந்திரி முதலானோர்; பரிவுதப - கருணை கெட; பிண்டம் - பொருள்; நச்சின் - விரும்பினால்.]

மன்னன் மனத்தை மாற்றியது இந்த மந்திரக் கவிதை. நமது மந்திரிகள் மனம் மாறுமோ?

சென்னை—4
31—8—66
திருநாவுக்கரசு

''ஏப்'' என்னும் சாதனம் இலவசமாகத்தான் பொருத்தப்படுகிறது. ஆனால் அதனால் சிலருக்கு உபத்திரவங்கள் ஏற்படுகின்றன. இங்கு அதனால் அவதிக்குள்ளானவர்கள் மறுமுறை டாக்டர் இதற்காக வந்தபோது அவரிடம் யோசனை கேட்டார்கள். டாக்டர் இலவசமாகத்தான் மருந்துகள் எழுதிக் கொடுத்தார். ஆனால் மருந்துகள் தரவில்லை. கடையில் வாங்கிக்கொள்ளச் சொல்லிவிட்டார். அவர்மீது தவறில்லை. மருந்துகளோ, திருமிநாசினியோ இலவசமாக வழங்க அவருக்கு அனுமதியில்லை. அவர் என்ன செய்வார்?

விலைவாசி ஏற்றத்தால் ஏற்கனவே அல்லலுறும் ஏழைகளுக்கு இந்த மாதிரி வீண் உபத்திரவத்தைக் கொடுக்கலாமா?

ஜாக்ராகண்ட்
27—8—66
லலிதா பரமேசுவரன்

ஒவ்வொரு சொல்லும், தன் சுவை குன்றாது தத்தம் இடங்களில் பொருந்தி யிருக்க, காவிய நயத்தினை வெளிப்படுத்தும் அற்புத சிருஷ்டி ''காற்றினிலே வரும் கீதம்.'' ஆசிரியரின் அழகு தமிழ் நடையும், உதாரணங்களும் இதயத்தை நிரப்புகின்றன. 'கருதி சேர்ந்தது' என்ற தலைப்பும் மிகப் பொருத்தம். உண்மையில் முதல் அத்தியாயத்திலேயே கருதி சேர்ந்துதான் விட்டது.

கோயமுத்தூர்
1—9—66
விமலா ரமணி

உணவுப் பொருட்களில் கலப்படம் செய்வோரைத் தண்டிக்க வேண்டியதுதான். இப்போது பல சந்தர்ப்பங்களில் நேர்மையாகச் சில்லறை வியாபாரம் செய்வோர் தண்டிக்கப்படுகிறார்களேயன்றி உண்மையில் கலப்படம் செய்வோர் அல்ல. மிட்டாய்கள், பிஸ்கட்டுகள், பெருங்காயம் போன்ற சில பொருள்களில் அவற்றின் தயாரிப்பாளர்கள் தவறிழைக்கிறார்கள். அவர்கள் தண்டிக்கப்படுவதில்லை. அவற்றை வாங்கி விற்கும் சில்லறை வியாபாரியின் கடையிலிருந்து சரக்கை மாதிரிக்கு எடுத்துப்போய்ப் பரிசோதனை செய்கிறார்கள். கெட்ட சரக்கை வைத்திருந்தால் வியாபாரிகள் குற்றம்புரிந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள். கெட்ட சரக்கு இது என்பது அந்த வியாபாரிகளுக்குத் தெரிவதில்லை. அதை ஆராய்ந்து அறிவதற்கான விஞ்ஞான சாதனங்களோ ரசாயன அறிவோ இவர்களுக்கு ஏது? ஆகவே அரசினர் இவ்விஷயத்தில் பரந்த நோக்கம் கொண்டவர்களாய் இயங்கி உண்மைக் குற்றவாளிகளைப் பிடிக்க வேண்டுமேயன்றி வியாபாரிகள் மீது நடவடிக்கை எடுக்கக் கூடாது.

கோவை
2-9-66
கோவை மளிகை வியாபாரிகள் சங்கம்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

# புதுமையின் பொலிவுக்கு ஹமாம்




அதிக காலம்
நீடித்துழைக்கும்
டாய்லெட்
சோப்

நாள்தோறும் ஹமாம் உபயோகியுங்கள். உங்கள் சருமத்தைச் சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது, உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் கொடுக்கிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.

டாடா தயாரிப்பு

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon